அண்மையில் திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் இரண்டு நாட்கள் நடைபெற்ற வேதங்களைப் பற்றியக் கருத்தரங்கினை முன்னாள் மத்திய அமைச்சர் டாக்டர். கரன்சிங் அவர்கள் துவக்கி வைத்தார்.



டாக்டர். கரன்சிங் அவர்கள் தி.தி.தே. செயலாட்சித்தலைவரால் வரவேற்கப் படுகின்றார்.



டாக்டர். டி. அர்க்கசோமயாஜி அவர்கள் கூட்டத்தினரை வரவேற்று உரையாற்றுகின்றார்.

வருகை புரிந்திருந்த கூட்டத்தின் ஒரு பகுதியினர்.





மைவண்ணத் திருவடிவம் கொண்ட மாலே!
  மழைவண்ணம் கருணையுள மாகி நின்றாய்!
மெய்வண்ணம் என்பதெல்லாம் மேலாம் அன்பு;
  மீளிர் இராமன் நிலவண்ணம் இன்பவெள்ளம்;
செய்வண்ணத் திறத்தாலே கடமை யாற்றிச்
  செம்மல்நின் அறவண்ணம் மூச்சாய்க் கொண்டே
உய்வண்ணம் உயர்வண்ண நெறியில் வாழ்ந்தே
  உலகோரின் புறம்வண்ணம் காப்பாய் திண்ணம்.

— கவிஞர். ப. கோவிந்தராசு.






# ஸப்தகிரி

மலர்: 8 ஏப்ரல் 1978 இதழ் 11

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:
திரு: பி. எஸ். ராஜகோபாலராஜு,
ஐ. ஏ. எஸ்.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer,
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டைப்படம்: ஸ்ரீ வேதநாராயண சுவாமி கோயில்-நாகலாபுரம்.

# ஆசிரியர் உரை

பரம்பொருளின் உண்மை உணர்ந்து, மனித நிலை உயர்த்திடும் பல தத்துவக் கருத்துக்களையும், அறக் கோட்பாடுகளையும், புனித இலட்சியங்களையும் சுமந்து நிற்கின்றன வேதங்களும், உபநிஷத்துக்களும், வேதாந்தங்களும். ஆனால் சமுதாயத்தின் ஒரு பகுதியினர்க்கே, அதாவது ஞான நிலையை அடையப் பெற்றவர்களுக்கே, இவை காட்டும் வழி எளிதாக அமைந்திருந்தன; அமைந்திருக்கின்றன. இவற்றால் உணர்த்தப்பெறும் பரம்பொருளைக் கண்டு தெளிவது என்பது, அடர்ந்த காட்டின் நடுவில் நன்கு விளங்கும் கனியினை அடைதல் போன்றதாகும். ஆனால் வேத உபநிஷத்துக்களுக்குப் பின்னர், அவற்றின் சாரமாக, சமய அறிவினை எளிதிற் பெறும் வகையில் தோன்றிய இதிகாசங்களும், புராணங்களும் ஓர் எளிமையான நேரான வழியாக அமைந்து, மாநகரின் நடுவில் உயர்ந்து நிற்கும் பெருங் கட்டடத்தை நடந்து வரும் ஒரு புதியவனும் அறியும் முறையில் விளங்குகின்றன. வேதங்களிலும், உபநிஷத்துக்களிலும் கூறப் பெறும் அருங் கருத்துக்களை, வாழ்க்கை இலட்சியங்களை இதிகாசங்களிலும் புராணங்களிலும் எளிமையாக சிறு சிறு நிகழ்ச்சிகளின் மூலம் நேரடியாக அமைந்து, அவற்றைப் படிக்கும் அல்லது கேட்கும் ஒவ்வொரு பாமரன் உள்ளத்திலும் கூட இறையுணர்வை தூண்டும் வண்ணம் திகழுகின்றன. சிறப்பாகச் சமய உணர்வை மக்களிடையே பரவச் செய்து, குமரி முதல் இமயம் வரை உள்ள ஒவ்வொரு இந்தியனையும் சிந்திக்க வைத்து அவர்களிடையே ஓர் ஒருமைப்பாட்டு உணர்வினை வித்திட்டன இதிகாசங்களே எனின் மிகையாகாது. அவன் காண அவாவுறும் அறவாழ்வும், தற்போது பின்பற்றும் சமயப் பாதையும், வணங்கும் கடவுளர்களும், சமய விழாக்களும், சடங்குகளும் அந்த இதிகாசங்கள் அளித்தவைதான்.

வேதங்களும், உபநிஷத்துக்களும் கூறிய வாழ்க்கை இலக்கணங்களுக்கு, இலக்கியமாக திகழ்கிறது இதிகாசங்களில் ஒன்றான ராம காவியம். மனிதனுள் உறையும் இறைமைப் பண்புகளான அன்பு, இரக்கம், பரிவு ஆகியவற்றையும், மனிதனிடம் உள்ள அழகை ரசிக்கும் தன்மை, அற்புதமானவற்றைக் கண்டு அதிசயிக்கும் போக்கு, சாகசச் செயல்களைக் கண்டு ரசிப்பது போன்ற உணர்ச்சிகளையும் மனதிற் கொண்டுதான் வால்மீகி தன் காவியத்தை படைத்திட்டார். உயிருள்ளளவும் மனிதன் பிறருக்குப் பயன்பட வேண்டுமென்பதும், அம்முயற்சியின் வழியாகவே நம்மை நாம் கடைத்தேற்றிக்கொண்டு, நம் இலட்சியத்தை அடைய வேண்டுமென்பதும ராம காவியம் கூறும் பாடமாகும். காவியத் தலைவனான இராமன் திருமாலின் அவதாரமென்றாலும், அவனை ஓர் அரச குமரனாக மட்டுமன்றி, ஆசாபாசங்களைக் கொண்ட ஒரு சாதாரண மனிதனாக உலவவிட்டு, அவன்மூலம் ஒரு சமுதாயத்தைச் சீர்திருத்தும் முயற்சி இராமாயணத்தில் மேற்கொள்ளப்பட்டுள்ளது. இன்றைய இருபதாம் நூற்றாண்டுக்கு இன்றியமையாத, ஒவ்வொரு இந்தியனும் எண்ணிப் பெரும் பயன்பெறும் வகையில் கடமையின் அவசியம், அதன் மேம்பாடு, காவியத்தின் எல்லா பாத்திரங்களின் மூலம் விளக்கப்பட்டு, அக்காவியம் வாழ்க்கையின் 'தர்ம சாஸ்திரமாக' விளங்குகிறது. ஆளுவோர் ஆளப்படுவோர், பெற்றோர் பிள்ளைகள், எதிரிகள் நண்பர்கள், அலுவலர்கள் வேலை யாட்கள், ஆசிரியர்கள் மாணவர்கள் மற்றும் தூதுவர் என்று சமுதாயத்தின் பல்வேறு நிலைகளில் நின்று நடமாடும் எல்லோருடைய கடமைகளையும் இராமாயணம் நினைவுபடுத்துகின்றது. ஆம், தங்கள் உரிமைகளைக் கேட்பதைவிட தங்கள் கடமைகளை செவ்வனே ஆற்றுவதே நலம் பயக்கக்கூடியது என்ற மக்களாட்சியின் அடிப்படைக் கொள்கையினை அறுதியிட்டு கூறுவது ராம சரிதை. தனக்குப் பட்டம் இல்லை என்றபோதும், பதினான்கு ஆண்டுகள் காடு செல்ல வேண்டும் என்றபோதும, மகன் என்ற முறையில் தந்தையின் சொல் காக்கப்படல் வேண்டும். என்ற கடமையில், மக்களின் எதிர்ப்புகளுக்கிடையே புன்சிரிப்புடன் காடேகினான். ஆனால் தன் மனைவியின் அதாவது நாட்டின் அரசியின் கற்பைக் குறைகூறிய ஒரு சாதாரண குடி மகனின் ஐயத்தைப் போக்குதற்காக, ஒரு நாட்டின் அரசன் என்ற முறையில் தன் கடமையை நிறைவேற்றும் பொருட்டு தன் மனைவியையே நாடு கடத்தினான். மேலும், மறைந்திருந்து கொல்வதால் தாம் ஒரு நாள் சர்ச்சைக்குரியவனாவோம் எனத் தெரிந்தும், தர்மத்தைக் காப்பது தன் கடமை என்ற உணர்வில், மாற்றான் மனைவியைக் கைப்பற்றியக் குற்றத்திற்குத் தண்டனை யளிக்கும் வகையில் வாலியை இராமன் கொன்றான். நட்புக்கு ஜாதி மத பேதமில்லை என்பதை அறிவுறுத்தும் பொருட்டு, வேடனான குகனை தன் சகோதரனாக்கிக் கொண்டான். இந்திய இல்லற வாழ்விற்கு பெருமை தேடி தரும் 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற அரும்பண்பிற்கு அடையாளமாக இராமன் விளங்கினான். இது போன்ற பல பண்புக்கூறுகளைத் தன்னகத்தே கொண்டு, இராமன் தன்னிகரற்று விளங்கி ஆடவர்க்கு ஓர் முன்னோடியாகத் திகழ்ந்தான். நாட்டின் நல்லொழுக்கம், முதலில் வீட்டிலிருந்துதான் ஆரம்பமாகிறது என்பதை இராமன்-சீதை இல்வாழ்வு வடிந்துக் கூறுகின்றது. இராமனுடன் இலக்குவன், பரதன், குகன் முதலானோர் கொண்ட பிணைப்பு, பாசத்தின் பெருமையைப் பறை சாற்றுகின்றது. இராமனுடன் அனுமன் கொண்ட உறவு நட்பு, பக்தி, தொண்டு, அடக்கம், எளிமை, விவேகம் ஆகியவற்றின் சிறப்பையும், சீர்மையையும் மட்டுமின்றி, பரமாத்மா ஜிவாத்மா இணைப்பையும் அறிவிக்கின்றது.

பாதை தவறாக இருந்தாலும், தன் காரியம் வெற்றி பெற தகாது செயற்படும் மனிதனுக்கு, கைகேயியின் கைமைக் கோலம் ஒரு பாடம்; பொறாமையும், காமமும் கொண்ட மனிதன் இறுதியில் அழிவைப் பெறுவான் என்பதற்கு சூர்ப்பணகை, இராவணன் பாத்திரங்கள் உதாரணங்கள்; ஆசை அழிவுக்கு வித்திடும் என்பதற்குச் சீதை ஓர் எடுத்துக் காட்டு; மண்ணாசையும் பெண்ணாசையும் தன் உயிருக்கும், புகழுக்கும் காலன் என்பதை நினைவுறுத்தவே தோன்றியது வாலியின் படைப்பு.

எனவே சீர்மைமிகு ஒரு தனி மனிதனைக் காட்டி, அவன்மூலம் செழுமையான கடமை உணர்வுகொண்ட ஓர் சமுதாயத்தைப் படைத்து, இறுதியில் மனித வாழ்வின் இறுதி இலட்சியமான பரம்பொருளின் உண்மை உணர்ந்து அவனருள் பெறும் வண்ணம் ஒரு சமய வழியை அறிவுறுத்தும் பணியைச் செவ்வனே நிறைவேற்றிய இராம காவியம், சமூக வாழ்க்கையையும் ஆன்மிக வாழ்க்கையையும், அகிம்சையையும் க்ஷத்திரிய தர்மத்தையும், பக்தியையும் யோகத்தையும், கர்மாவையும் ஞானத்தையும் இணைத்து புதுமைக் கலாச்சாரப் பூஞ்சோலையாக விளங்குகிறது என்பதில் சிறிதும் ஐயமில்லை. இப்பூஞ்சோலையில் பவனிவரும் இடத்து, மானிடம் மாண்புறும் விதத்தில், பல இலட்சியக் கருத்துக்களையும், அறவாழ்வுக்குரிய பண்புக்கூறுகளையும் விளக்கும் பல வண்ண மணங்கமழ் மலர்களைக் காணலாம்.

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

15-2-78 அன்று திருமலையில்கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:

1-9-77 முதல், ஆந்திர மாநில அரசு ஊழியர்களுக்கு அதிகப்படியான பஞ்சப்படி வழங்கும் வகையில் நிறைவேற்றப்பட்ட எண். எம்எஸ். 12 நிதி மற்றும் (நிதிப்பிரிவு பி.ஆர்.சி. 1) துறை தேதி 5-1-1978 என்ற அரசு உத்தரவினை, தேவஸ்தான ஊழியர்களும் பயன்பெறும் வகையில், தானும் அமுலாக்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ ஃ

உதவியாளர் பதவிக்குச் சமமாக, 6 புதிய 'பொட்டலம் கட்டுபவர்' (packers) பதவிகளை தி. தி. தேவஸ்தான கோயிலுக்காக ஏற்படுத்த குழு அனுமதியளித்துள்ளது.

ஃ ஃ ஃ ஃ

திருப்பதி, முதல் புதிய சத்திரத்தில், தனியாருக்கு விடப்பட்டுள்ள தி. தி. தேவஸ்தான உணவு விடுதி கட்டடத்திற்கான வாடகையாக (Standard rent) மாதம் ஒன்றிற்கு ரூ. 4,750 வசூலிப்பதென்று குழு முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ ஃ

திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா கீழ்த்திசைக் கல்லூரியில் 'பி.' வித்துவான் பயிலும் மாணவர்களில் 5 பேருக்கு மட்டுமே உதவித் தொகை வழங்கப்பட்டு வருகிறது. அவ்வெண்ணிக்கையை 15 ஆக உயர்த்துவதென்று குழு முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ ஃ

தி.தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் ஸ்ரீ தியாகராஜ இசை விழாவை திருப்பதியில் நடத்துவதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஃ ஃ ஃ ஃ

சென்னை தியாகராய நகரிலுள்ள கூச்சுபூடி ஆர்ட்ஸ் அகாடமிக்கான கட்டடம் ஒன்றினைக் கட்டுவதற்கு, அதற்கான மனை ஒன்று கிடைத்த பிறகு, தி. தி. தேவஸ்தானத்தின் பங்காக ரூ. 1,00,000 வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஃ ஃ ஃ ஃ

சென்னை வில்லிவாக்கத்திலுள்ள ஸ்ரீ கனகதுர்க்கா தெலுங்கு உயர்நிலைப் பள்ளி கட்டடத்திற்காக, தேவஸ்தானத்தின் பங்காக ரூ. 25,000 வழங்க குழு முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ ஃ

மங்காபுரம் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலுக்கு ஓர் உதவி அர்ச்சகர் பதவியை ஏற்படுத்துவதற்கு குழு அனுமதியளித்துள்ளது.

ஃ ஃ ஃ ஃ

திருப்பதி அலிபிரி அருகில், ஆங்கில மொழியைப் போதனு மொழியாகக் கொண்ட தேவஸ்தான பள்ளிக்கான கட்டடம் ஒன்றினைக் கட்டுவதற்குக் குழு ரூ. 24,00,000 ஒதுக்கியுள்ளது.

ஃ ஃ ஃ ஃ

ஆந்திர மாநில அரசு தரப்பிலிருந்து திரு. வி. வி. ராமகிருஷ்ண சாஸ்திரி அவர்களை தற்காலிகமாக புதிய தேவஸ்தான கணக்கு அலுவலராக நியமிக்க குழு அனுமதி அளித்துள்ளது.

ஃ ஃ ஃ ஃ

தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுவிலிருந்து இரண்டு அங்கத்தினர்களை தன்னுடைய மேலாண்மைக் குழுவில் ஏற்றுக் கொள்ளுவதாக இருந்தால், அலகாபாத்திலுள்ள கோயிலுக்கு ரூ, 5,00,000 வழங்க குழு முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ ஃ

ஆந்திரமாநிலம் கிழக்கு கோதாவரி, ஸ்ரீ காகுளம், விசாகப்பட்டினம், மேற்கு கோதாவரி, ஹைதராபாத், அதிலாபாத் ஆகிய மாவட்டங்களிலுள்ள புகழ்பெற்ற கோயில்களைப் புதுப்பித்தல் அல்லது அக்கோயில்களில் புதுக்கிளைக் கோயில்கள் கட்ட அல்லது திருமண மண்டபங்கள் அமைக்க குழு ரூ. 1,90,000 ஒதுக்கியுள்ளது.

## சந்தாதாரர்களுக்கு . . .

31-5-78 ஆம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும். T

7, 19, 49, 78, 81, 86, 87, 142, 146, 204, 213, 215, 216, 240, 244, 257, 265, 293, 296, 297, 298, 303, 470, 503, 504, 509, 720, 743, 784, 819, 1026, 1121, 1152, 1155, 1165, 1187, 1189, 1190, 1192, 1196, 1199, 1202, 1204, 1205, 1868, 1870, 1871, 1873, 1874, 1877, 1878, 1879, 1880, 1881, 1882, 1883, 1884, 1885, 1886, 1887, 1888, 1889, 1890, 1891, 1892, 1893, 1894, 1895, 1896, 1897, 1898, 1899, 1900, 1901, 1902, 1903, 1904, 1907, 1908, 1909, 1910, 1911, 1912, 1913, 1914, 1915, 1916, 1917, 1918, 1919, 1920, 1921, 1922, 1924, 1925, 1927, 1928, 1929, 1930, 1931, 1932, 1933, 1934, 1935, 1936, 1939, 1940.

# கோவிந்த பட்டாபிஷேகம்

திரு. பி. ஆர். ரங்கராஜன்.
திருப்பதி.



பலராமனுடன் கானகத்தில் வசிக்கும் கிருஷ்ணன், இடையர்கள் (கோபாலர்கள்) இந்திரனை உத்தேசித்து யாகம் செய்ய முயற்சிப்பதைக் கண்டான். ஸர்வக்ஞனான அவன் அதை அறிந்திருந்தபோதிலும், ஒன்றும் தெரியாதவன்போல் நந்தகோபர் முதலிய கோபாலவ்ருத்தர்கள் இருந்த இடம் நோக்கி வந்து, தனது தகப்பனைப் பார்த்து, 'அப்பா! எதற்காக உங்களுக்கு இவ்வளவு பரபரப்பு? இங்கு நீங்களெல்லோரும் என்ன செய்யப் போகிறீர்கள்?' என்று கேட்டான். அதற்கு நந்தகோபர் 'இந்திரனை உத்தேசித்து யாகம் செய்யப்போகிறோம். அவனன்றோ மழையினால் பூமியை சுகப்படுத்துகிறான்! மேலும் பூமியிலுள்ள மனிதர்களின் பிழைத்தற்குரிய பொருள் யாவும் மழையை யொட்டி ஏற்பட வேண்டுவதாக இருக்கிறது. கோபர்களான நமக்கோ மழையின் உதவி இன்றியமையாதது. நமது செல்வமான பசுக்கள் புல்லையும் ஜலத்தையும் கொண்டு உயிர்வாழ்கின்றன அல்லவா?' என்றார். இதைக் கேட்ட கிருஷ்ணன் ''தந்தையே! மழையானது இந்திரனால் உண்டுபண்ணப்படுவதன்று. ஜீவர்களின் கர்மமன்றோ காலத்திற்கேற்ப மழையை உண்டுபண்ணுகிறது. நமது குலத்திற்கு பசுக்களே செல்வங்கள். அப்படிப்பட்ட பசுக்களைக் காப்பாற்றுகிற 'கோவர்த்தன கிரி'க்கே பூஜை செய்ய வேண்டும்'' என்றான். கிருஷ்ணனின் வார்த்தையில் நியாயம் இருப்பதாக எண்ணிய கோபர்கள் உடனே தேவேந்திர பூஜையை விடுத்து கோவர்த்தன கிரிக்கே பூஜையை செய்ய நிச்சயித்தனர். அவ்வாறே செய்ய அவர்கள் மலையை வலம் வந்தனர். விண்ணுலகத் தேவர்களுக்குச் செய்யும் பூஜைகளை நிலத்தேவராம் அந்தணர்களுக்குச் செய்தனர். மாயனாகிய அந்த கிருஷ்ணனும் மலையபிமானி புருஷனாக உருவம் தாங்கி இடையர்கள் செய்யும் பூஜைகளை ஏற்றான். அவர்கள் முன்னிலையிலேயே அவர்கள் இட்ட பலியையும் உட்கொண்டான். இங்கு இடையர்கள் மத்தியில் உள்ள கிருஷ்ணன் 'மாயக் கண்ணனை'க் காண்பித்துப் ''பார்த்தீர்களா! என்னுடைய வார்த்தை வீணானதா? கோவர்த்தன கிரி தனக்கு இட்ட பலியை தனது சொந்த சரீரத்துடன் சாப்பிடுகிறது'' என்றான். இடக்கை வலக்கை அறியா அவர்களும் இவன் வார்த்தைகளை நம்பினர். கோகுலத்திலுள்ள கோபர்கள் யாவரும் மிக்க மகிழ்ச்சியடைந்தவர்களாய் இருக்கும் வேளையில், தன்னை உத்தேசித்து நடைபெற்ற யாகத்தை கிருஷ்ணன் தடுத்துவிட்டானே என்று விசனித்த இந்திரன் 'ரஜோகுண' மேலிட்டால் துயரடைந்து, பொருமி கோபங்கொண்டான். தானே மூவுலகுக்கும் ஈசன் என்று கர்வங்கொண்ட அவன் பிரளயத்தை உண்டுபண்ணக்கூடிய 'ஸாம் வர்த்தகம்' எனப் பெயருள்ள மேகக் கூட்டத்தை கோகுலம் பக்கம் அனுப்பி பிறகு பின் வருமாறு கூறினான். 'மனிதனான கிருஷ்ணனை ஆச்ரயித்து இந்த கோபர்கள் தேவனான எனக்கு அவமரியாதை செய்துவிட்டனர். காட்டையே வீடாகக் கொண்ட இந்த இடையர்களின் கர்வத்தைப் பாருங்கள்.'

வாசாலம் பாலிசம் ஸப்தம் அக்ஞம்
பண்டித மானினம் |
க்ருஷ்ணம் மர்த்யம் உபாஸ்ரித்ய
கோபா மே சக்ருரப்ரியம் ||

'அதிகமாகப் பேசுகிறவனும், சிறுபிள்ளையும், ஆகையாலேயே அறியாதவனும் தன்னை அறிஞனாக எண்ணிக்கொண்டவனும், வணங்காதவனும், மனுஷ்யனுமான கிருஷ்ணனை அணுகி இந்த இடையர்கள் எனக்கு விருப்பமில்லாததைச் செய்தனர்' என்றான். உண்மையில் இந்திரன் மனம் நொந்து கோபத்துடன் கூறிய சுலோகமே இது. ஆனாலும் உரையாசிரியர்கள் இதற்கு வேறு விதமாகவும் பொருள் கூறுகிறார்கள். நிந்தை வாக்கியத்தை ஸ்துதி வாக்கியமாக ஆக்கிக் காட்டுகிறார்கள். ஸ்ரீமத் ராமாயணத்தில் ஒரு காட்சி நம் மனத்திரையில் ஓடுகிறது. வால்மீகி தனது சிஷ்யன் பரத்வாஜனுடன் மாத்யான்ஹிக ஸ்நானத்திற்காக (பிற்பகல் செய்ய வேண்டிய ஸ்நானம் முதலிய அனுஷ்டானத்திற்காக) 'தமஸா' என்கிற நதிக்குச் செல்கிறார். இன்னும் ஸ்நானம் செய்ய நதியினுள் இறங்கவில்லை. அங்கு ஒரு கோரமான

காட்சியைக் கண்டார். இரு அன்றில் பறவைகள் சந்தோஷமாக இல்லற சுகம் அனுபவித்துக் கொண்டிருந்த வேளையில் ஓர் வேடுவன் அவ்விரண்டில் ஒன்றை கொன்றுவிடுகிறான். இதைக் கண்ணுற்று மனச்சாந்தி இழந்த வால்மீகி சோகத்துடன் அவ் வேடனை சபித்துவிடுகிறார். 'மாநிஷாத ப்ரதிஷ்டாம் த்வம் அகம: ஸாஸ்வதீ: ஸமா:' என்று. இந்த சுலோகம் சாப மேலீட்டால் விளைந்தது. இதை உரையாசிரியர்கள் ஸ்துதி செய்யும் சுலோகமாக மாற்றி இருவிதமாக பொருள் உரைக்கின்றனர். திருமலை நாயகனும் அலர்மேல்மங்கையுறை மார்பனை மங்களாசாசனம் செய்யும் சுலோகமாக மாற்றி பொருள் கூறுகின்றனர். அதேபோல் வாசாலம் என்கிற இந்த சுலோகத்தையும் நோக்க வேண்டும். கிருஷ்ணனை இந்திரன் நிந்திக்க வேண்டிப் பேசின போதிலும் அவனது அந்தராத்மா (உள் மனம்) ஸ்தோத்திரம் செய்கிறது என்கின்றனர் வ்யாக்யானம் செய்த பூர்வர்கள். 'வாசாலம்' என்பதால் சாஸ்திரங்களை வெளியிட்டவர் என்றும், (உண்மைதான் – வணங்கும் சமயம் பல பலவாக்கி, மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பல பல வாக்கியவரன்றோ) 'பாலிசம்' என்பதால் சிசுவைப் போன்ற நிலையை மேற்கொள்பவர் என்றும், 'ஸ்தப்தம்' என்பதால் தான் வணங்கக் கூடியவர் இல்லாத காரணத்தால் எவரையும் வணங்காதவர் என்றும், 'அக்ஞம்' என்பதால் தன்னைவிட மேலான அறிவாளி எவருமில்லாதவர் என்றும், 'க்ருஷ்ணம்' என்பதால் பக்தர்களுடைய ஹ்ருதயங்களைச் சுண்டி இழுக்கக் கூடியவர் என்றும், 'மர்த்யம்' என்பதால் தம்பக்தர்களிடத்தே உள்ள வாத்ஸல்யத்தினால் ராம – க்ருஷ்ணாதி மனுஷ்யாவதாரங்களை எடுத்தவரென்றும் ஸ்தோத்ரம் செய்ததாகவே பொருள் கண்டனர் நம் பெரியவர்கள்.

ரஜோகுண மேலீட்டால் சினம் கொண்ட இந்திரன், ஐச்வர்யத்தினால் கர்வங்கொண்டவர்களும் கிருஷ்ணனால் விருத்தி செய்யப்பட்ட சரீரத்தை உடையவர்களுமான இந்த கோபர்களின் கர்வத்தைப் போக்குங்கள் என்றும், பசுக்களை யமலோகத்துக்கு அனுப்புங்கள் என்றும் மேகக் கூட்டங்களுக்கு உத்திரவிட்டான். தானும் ஐராவதமென்கிற யானையின்மீது ஏறிக் கொண்டு வீரம் பொருந்திய தேவர்களுடன் கூட நந்தகோபருடைய பசுத் தொழுவத்தை அழிக்க கோகுலம் வருவதாகக் கூறினான். இவ்வாறு இந்திரன் கட்டளையிட்டதும் மேகங்கள் வேகமாக மழைத்தாரைகளினால் நந்தகோகுலத்தைப் பீடிக்கத் தொடங்கின. மின்னல்களினால் பிரகாசிக்கின்றவைகளாகவும், வேகமான வாயுக் கூட்டங்களினால் ஏவப்பட்டவைகளாகவும் இருந்து கொண்டு ஆலங்கட்டி மழையைப் பொழிந்தன. மேகங்கள் தூண்போல் பெருத்தவைகளான மழைத்தாரைகளை இடைவிடாமல் பொழிந்ததால், ஜலப் பெருக்கினால் மூழ்கிய பூமியானது மேடு பள்ளம் இன்றி காட்சியளித்தது. அதிகமான மழைத்தாரைகளினாலும், அதிகமான காற்றினாலும் நடுக்கம் எடுத்த கோபர்களும் கோபிகைகளும், பசுக்கூட்டங்களுடன் கிருஷ்ணனைச் சரணமடைந்தனர். [பயநாஸன: பயத்தைப் போக்குபவனன்றோ கிருஷ்ணன்.] பசுக்கள் மழைத்தாரைகளினால் பீடிக்கப்பட்டவைகளாய் தலையை முன் பக்கம் உள்ள இரண்டு கால்களுக்கும் நடுவே நுழைத்துக்கொண்டு கன்றுகளை வயிற்றின் கீழே மறைத்துக்கொண்டு நடுங்கியவாறு பகவானாகிய கிருஷ்ணனுடைய பாதமூலத்தை வந்தடைந்தன. 'வேபமானா: பகவத: பாதமூலமுபாயயு:' உடனே கோபர்களும் கோபிகளும் கிருஷ்ணனைப் பார்த்து 'கிருஷ்ணா! தயாநிதே! பக்தர்களிடம் அன்புகொண்டவனே! உன்னை நாதனாகக்கொண்ட பசுக் கூட்டத்தையும், எங்களையும் கோபங்கொண்ட இந்திரனிடமிருந்து காப்பீராக!' என்று ப்ரார்த்தித்தனர். எல்லாம் அறிந்த கிருஷ்ணனும் 'தலைப்பெய்து குமுறிச் சலம் பொதி மேகம் சல சல பொழிந்திடக் கண்டு' தனது ஏழாவது வயதிலேயே ஒரு கையினால் கோவர்த்தன மலையைப்பிடுங்கி, சிறு குழந்தை நாய்க்குடையைப்பிடிக்குமாப்போலேகையில் தூக்கினான். இந்த விருத்தாந்தத்தை தனது சுலோகத்தால் கூறிய நாராயண பட்டர் தனது நாராயணீயத்தில் 'தரணிமேவ புரா த்ருதவானஸி க்ஷிதிதரோத்தரணே தவ க: ச்ரம:' என்கிறார். 'குருபுரம் எனப்படும் குருவாயூரில் கோயில் கொண்டுள்ள குருவாயூரப்பா! முன்பொரு சமயம் ஈரேழு உலகத்தையும் உனது சரீரத்தில் நீ தாங்கினாய். அப்படிப்பட்ட உனக்கு இந்தச் சிறிய மலையைத் தூக்குவதில் சிரமமா இருக்கும்' என்று கேட்கிறார். அப்பரமனுக்குப் பாமாலையும் பூமாலையும் சூட்டிய ஆண்டாளும் 'திருப்பாவை' யில் 'அன்றிவ்வுலகம்' என்கிற பாசுரத்தில் 'குன்று குடையாய் எடுத்தாய் குணம் போற்றி' என்று கீர்த்தனம் செய்கிறாள். கிருஷ்ணன் குன்றை குடையாக எடுத்து கோபாலர்களை (அனுகூலர்களை)க் காத்தது போல், ப்ரதிகூலனாக வந்த இந்திரனுக்கும் தெளிவு பிறக்கும்படிச் செய்து, அவனை அனுக்ரஹித்து அவனுக்குத் தீங்கு செய்யாதிருந்த நிலையே இங்கு 'குணம்' எனப்படுகிறது. 'ஆந்ருஸம்ஸ்யம்' என்று இதை ஸம்ஸ்க்ருதத்தில் கூறுவர். 'எவருக்கும் தீங்கிழைக்காமல் காப்பளிப்பது' என்று இதற்கு பொருள். உண்மைதான்! 'கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா' என்று வேறோரிடத்தில் இயம்பியவளன்றோ ஆண்டாள். தன்னுடன் சேராதவர்களை வெல்லும் சீர்மை குணம் படைத்த கோவிந்தா என்று அழைத்ததாக ஆயிற்று. இதுவும் கோவர்த்தனகிரி வரலாற்றை எடுத்துரைக்கிறது. இங்கு 'கூடாதார்' இந்திரன் ப்ரதிகூலம் செய்தபடியால், கம்ஸாதிகள் த்வேஷம் காரணமாக, இவர்களை சௌர்யத்தால் வென்றான் கிருஷ்ணன். தங்கள் நீசத் தன்மையை நோக்கி பகவானை அணுகக் கூசுகிறவர்களும் 'கூடாதார்'. இவர்களை கருணையினால் வெல்கிறான் அப்பரமன்.

(33ஆம் பக்கம் பார்க்க)

தொடர் கட்டுரை

# முப்புரி தவதிகள்

(டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு.)

ஔவையார், புலவராகமட்டுமல்லாமல், இறையருள் பெற்ற ஞானியாகவும் விளங்கினர். ஐம்புலன்களையுமொடுக்கித் தவம் புரியும் யோகியாகவும் மதிக்கப்படுகின்றார்.

ஔவைப் பெருமாட்டியின் உபதேசமென்னவென்றால், ''ஒன்றாகக் காண்பதே காட்சி'' என்பது. ''தெய்வம் ஒன்றே கண்டீர்'' என்றே தன் செய்யுட்களில் கூறிவந்தார்.

''தெய்வம் ஒருவனே என்றும் உணர வல்லீரேல்,
அருவினைகள் ஐந்தும் அறும்''

என்றும் பாடியுள்ளார்.

ஔவைப் பிராட்டியார் கடைபிடித்த சைவ நெறியைப் புகழும் போது,

''சிவத்தைப் பேணிற் தவத்திற் கழகு'',

என்று கூறுகிறார். இப்படிக் கூறுங்கால், வைணவத்தையும் வற்புறுத்துவதைக் காண்கின்றோம்: ''திருமாலுக்கு அடிமை செய்'', என்ற திருவாக்கில், வைணவத்தைச் சீர்தூக்கிப் போற்றினர். கோயில் வழிபாட்டை மக்கள் கடைப்பிடித்தொழுகும்படி முழக்கமிட்டார்: ''ஆலயம் தொழுவது சாலவும் நன்று'', என்றும், ''வையந்தோறும் தெய்வந்தொழு'', எனவும் கூறி, ஜனங்களிடம் அவ்வப்பொழுது தன் ஒளியையும் வீசிக் கொண்டிருந்தார். ''தெய்வத்தை ஒரு நாளும் மறக்கவேண்டாம்'' என தெய்வ வழிபாட்டை இடைவிடாது போதித்து வந்தார்.

''அவனன்றி ஓரணுவும் அசையாது'' என்ற வாக்கை அவ்வப்பொழுது விளக்கிக் கொண்டிருந்தார்.

''அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்''

என்ற வாசகம், அக்காலத்திலுள்ளவர்களுக்கும், இக்காலச் சிறுவர்களுக்கும் வாலிபர்களுக்கும் உரியது. அன்னையும் தந்தையுமான பெற்றோரையே முதல் தெய்வங்களாக அமைத்தார். மீண்டும், ''தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை'' எனப் பளிங்குபோல் நமக்குக் காட்டுகின்றார்.

ஔவையார், திருமணம் செய்யாமல், இல்வாழ்க்கையில் ஈடுபடாமல், துறவியாக வாழ்ந்து, நமக்கு ஓர் வழி காட்டியாக விளங்கினர். நாடுதனில் தமிழ் ஞானம், தெய்வ வழிபாடு, இவைகளைப் பரப்பும் தொண்டு புரிவதற்காகத் துறவு நிலையை மேற்கொண்டார். பட்டி தொட்டி தோறும் சுற்றி அலைந்து, கையில் தடியூன்றி, கால் கடுக்க நடந்து, அன்புடன் ஏழை எளியவர்கள் கொடுத்த கூழமுதை உண்டு, தமிழகமெங்கும் ஞானத்தையும் தெய்விகத்தையும் பரப்பினர்.

நாம் ஔவையாருடைய ஜீவியத்தைக் கடைப்பிடித்தால், மூன்று சீர் திருத்தங்கள்—சமதருமம், சமத்துவம், சகோதரத்துவம் அடைவோம்.

## ஔவையார் கோயில் :

ஔவைப் பிராட்டியின் கோயில் தஞ்சை மாவட்டத்தில் வளவனூற்றின் கீழ்க்கரையில் திருவிடம்பாவனம் என்ற ஊருக்குக் கீழ் திசையில் துளசியார்பட்டி என்ற கிராமத்தில் உள்ளது. மற்றொன்று, குமரி மாவட்டத்தில் முப்பந்தல் என்னுமிடத்தில் உளது. ஔவையாரைப் பல மக்கள் பெண் தெய்வம் எனக் கொண்டாடி வருகின்றனர்.

பக்தியின் உருவாகவே ஔவைப் பிராட்டி தமிழ் நாட்டில் சஞ்சரித்து, மக்களுக்கு உற்சாகம் அளித்தனரென்றும், விநாயகரையே பூசித்து வந்தனரென்றும், இல்வாழ்க்கையை வெறுத்துச் சமயத் தொண்டு புரிந்தனரென்றும் கூறினல் மிகையாகாது. பக்திக் கவிதை பாடிய பெரும் பக்தையான நம் மூதாட்டியார் உலகிற்கு ஓர் உதாரணமாக வாழ்ந்தார்.

## சிவனடி சேர்ந்த சோகம்:

ஔவைப் பிராட்டியார் இருநூற்று நாற்பது ஆண்டுகள் வாழ்ந்தனர் என திட்டமாய்க் கூறலாம். காலன் இவரிடம் நெருங்கவில்லை. தான் வாழ்ந்த காலத்தைச் செவ்வனே உபயோகப் படுத்திக்கொண்டார்.

சேரமான் சக்கரவர்த்தியும் மற்றொரு சிவனடியாரும் கைலாசம் செல்லும் போது, பிராட்டியார் விநாயகர் பூசை செய்து கொண்டிருந்தார்.

---

அன்பனே !

நீ தேடிய பொருளை வேறு ஊருக்குக் குடிமாறிப் போகும்போது உடன் கொண்டு போகின்றாயன்றோ ? இந்த உடம்பை விட்டு நீ புறப்படும்போது உன் செல்வம் உன்னுடன் வரவேண்டாமா ? வரவேண்டுமானல் தருமஞ்செய்; ''எங்காயினும் வரும் ஏற்றவர்க்கு இட்டது.'' பூசை செய்யும் நேரம் உன்னுடைய நேரம். தருமஞ்செய்த பணம் உன்னுடையது; நீ செய்த அறம் கட்டமுதுபோல் உனது பெரிய யாத்திரையில் இனிது உதவும்.

—திருமுருக கிருபானந்தவாரியார்.

---

வழக்கத்திற்கு விரோதமாக ஔவைப் பிராட்டித் தன் பூசையை அவசரத்துடன் முடிக்கப் பிரயத்தனப்பட்ட பொழுது, விநாயகர் குறுக்கிட்டு அவசரப்பட வேண்டாமென்றும், தானே ஔவைப் பிராட்டியைக் கைலாசம் சேர்த்துவிடுவதாகவும் கூறி, ஔவையின் அச்சத்தை அகற்றினார். பூசை செவ்வனே முடிந்ததும், விநாயகர் தன் துதிக்கையால் ஔவையாரைக் கைலாசம் சேர்த்தினார். சேரமான் சேர்வதன் முன்னம், கைலாசத்தில் சிவபெருமானை அடைந்து, அவன் பாதாரவிந்தங்களில் ஆவியைத் துறந்தார், விண்ணும் மண்ணும் புகழவே.

### ஔவையார் வள்ளுவரின் தமக்கையல்லவோ!

அறிவு, ஞானம், தெய்வீகம் நாட்டிலும் குடும்பத்திலும் வாழையடி வாழையாகக் கமழ்கின்றது. வள்ளுவரும் ஔவையும் நல்ல அறிவாளிகள். உலகின் நன்மைக்காக நீதி நெறிகளைப் போதித்தனர், சகோதரனும் சகோதரியும்.

கல்வியைப்பற்றிப் பேசுங்கால், வள்ளுவர் தன் குறளில்:

''எண்ணென்ப ஏனை எழுத்தென்ப
இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு.''

என்று எண்ணையும் எழுத்தையும் இரண்டு வரிகளில் விவரிக்கிறார். ஔவையாரோ,

''எண்ணும் எழுத்தும் கண்ணெனத்
தகும்''

என ஒரே வரியில் முடிக்கிறார்.

மற்றும், நாம் முற்பிறப்பில் செய்த பாப புண்ணியங்களை இப்பிறப்பில் அநுபவிப்பது உறுதி. இதனை வள்ளுவர் பெருமான்,

''பிறர்க்கின்னா முற்பகல் செய்யின்
தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்''

என இரண்டு வரிகளில் கூறுகிறார்.

ஔவைப் பிராட்டியோ, இந்த நீதித் தத்துவத்தை,

''முற்பகல் செய்யின் பிற்பகல்
விளையும்''

என்று ஒரே வரியில் சொல்லி முடித்தார்.

இறைவனையே குறிக்கோளாகக் கருதிவந்தார், நம் மூதாட்டியார். உலகப் பற்றுகளை அனைத்தும் துறந்து, பரம ஞானியாக, உலக நன்மைக்காக பாடுபட்டார் ஔவைப் பிராட்டியார்.

### இறுதிக்கு வந்தோம்.

முருகப்பெருமான் ஔவைப் பிராட்டிக்குக் காட்சியளித்து, ஔவைப் பெருமாட்டியின் அருங்கலையை அநுபவிக்கும் வகையில் ஔவையுடன் உரையாடி, 'கொடியது எது?' என முருகப்பிரான் ஔவையாரைக் கேட்ட போது, ஔவைப் பிராட்டி,

''கொடிது, கொடிது, வறுமை
கொடிது''

என்று வறுமையின் கொடுமையை முதலில் கூறிய பின்னரே, ஏனைய கொடுமைகளை எடுத்துக் காட்டினார்.

ஔவையாரின் வாழ்க்கை இறுதிக்கு வந்தோம். ஔவையாருடன், சூடிக்கொடுத்த நாச்சியார் — ஆண்டாள், என்ற பெண் ஆழ்வாரையும் பார்ப்போம். இவ்விருவர்களுடன் புனிதவதி என்று அழைக்கப்படும் காரைக்கால் அம்மையாரையும் சற்று ஆராய்வோம். இம் மூன்று பெண் திலகங்களும் நம் நாட்டைப் பெருமை படுத்திய உத்தமிகள்.

(தொடரும்)

## அன்னையே உனதருளே செல்வம்

திரு. சி. முருகேசன், B.A.,

செல்வம் தருபவளே செவ்வேள் திருமால்
இல்லம் இருப்பவளே எங்கள்குல தேவியே
அள்ளித் தந்திடுவாய் அளவிலாச் செல்வம்
வள்ளலாய் வாழ்ந்து வறுமைப் போக்கிடவே.

வான்தரும் மழையென வழங்கிடும் செல்வம்
தேன்தரும் சுவையென திகட்டாது அதுபோலநீ
ஈந்திடும் செல்வம் எல்லோரும் பயன்பெறவே
ஏந்திடும் அன்னையே உனதருளே செல்வம்.

போதுமென்ற மனமே புகழ்மிக்க செல்வம்
ஏதும் இவ்வுலகில் இருப்பதில்லை நீண்டு
ஆதல் அடக்கிடும் ஆண்மையே செல்வம்
ஈதல் ஒன்றுதான் இணையிலா செல்வம்.

பேதைக்கு இவ்வுலகில் பொருளே செல்வம்
மேதைக்கு இவ்வுலகில் மகிழ்சி செல்வம்
மூதுரையே அறிஞர்க்கு முத்தான செல்வம்
ஆதாரமாம் உனதருளே அன்பர்க்கு செல்வம்!

# திருவேங்கடவனின்

# திருவருள் தேவி



திரு எஸ். வி. ராமசுவாமி,
செகந்திராபாத்

எம்பெருமானின் தயை எனும் தேவி பவனிவரும் அழகை ஸேவித்து மகிழ்ந்த கவி தன் மதி மயக்கத்தைத் தெளிவிக்க அவளை வேண்டுகின்றான்

"அன்னையே! என் பாபங்களுக்கு எல்லையே இல்லை. பிறர் புண்ணியங் களை எல்லாம் ஒரு சிறிய ஆசனமாக உறிஞ்சி பிறப்பு இறப்புஎன்னும் மீளா மயக்கத்தை எனக்களித்துவிட்டது.

அஞ்சனகிரியில் இம் மயக்கத்தைப் போக்கவல்ல மருந்துளது. அதனு டனே தோன்றி அதனை மகிழ்விக்கின்ற நீ ஒருத்தியே என்னை உயிர்ப்பித்து நல் வாழ்வளிக்கவல்லவள். மருத்துவனு யும் மருந்தாகவும் ஆழ்வார்களும் ருஷி களும் பேசும் அத்திருவேங்கடவனைக் கொண்டு என்னுடைய இச்சம்சாரம் எனும் மயக்கத்தை தெளிவிப்பா யாக.

''அபிநிகில லோக ஸுசரித
முஷ்டிம் தய துரித மூர்ச்சனு
ஜுஷ்டம்
ஸஞ்ஜீவயதி தயேமாம்
அஞ்சன கிரிநாத ரஞ்ஜநீ பவதீ''.

நற்குணக் குன்றான நாதன் திரு வேங்கடவன். அவன் ஏனைய எல்லா நற்குணங்களில் உனக்கே முதலிட மளித்துள்ளான். கடல்போன்ற உன் தயையில் அவனும்தான் மூழ்கி விட்டான்.

"மலைமீதுள்ள அவனே என் பிரவா கத்தில் மூழ்கிவிடும்போது உன் பாவங் களும் மூழ்கிவிடட்டுமே"

"இல்லை. உன்னுள் மூழ்கிய அவன் திருவுளத்தில் என்றும் நடையாடும் என் பாபங்கள் பல''.

"அப்படியானல்?"

"நீ கை கொடுத்துக் காப்பாற்று வையேல் உன்னுள் மூழ்கிய அவன் திரு வுள்ளத்திலும் உள்ள என் பாபங்கள் மறைந்துவிடும். என்னையும் சீற்றம் தணிந்து காப்பாற்றிவிடுவான்.''

''பகவதி தயே பவத்யா
வ்ருஷகிரிநாதே ஸமாப்லுதே துங்கே!
அப்ரதிக மஜ்ஜனும்
ஹஸ்தாலம்போ மதாகஸாம்
ம்ருக்ய:''

அம்மா தயா தேவியே! சேதநர் தன்னை அடைய உனது நாதன் கர்ம, ஞான, பக்தி யோகாதிகளை விதித் தான். ஆனல் இவ்வழிகள் எவற்றை யுமே செய்ய இயலாத மனிதன் செய லற்றவனுய் உன்னையேயல்லவா பேசு கின்றான்.

தலைவன், தயை காப்பாற்றும் என்று திடமாகவும் பேசுகின்றான்.

போகட்டும். செய்த பாபங்களுக்கு உரிய பிராயச்சித்தங்களையாவது செய் யவல்லவனுயுளனு சேதநன். அதற்கும் தயையாகிய உன்னையே சரணடை கின்றான். அப்படிப்பட்டவர்களைக் காப்பாற்றும் கற்பகக் கொடியென் றல்லவா உன்னைப் பேசுகின்றனர். அந் தப் பிராயச்சித்தங்களையும் ஒழுங்காகச் செய்து முடிக்க எம்பிரான் தயையாகிற உன் தயவே தேவைப்படுகின்றது. இவற்றையெல்லாம் உணர்ந்தே ஞானிகள் "ஸம்ஸார தாரிணீம்" (பிறப்பிறப்பாகிய பிரவாகத்தினின்று கறை யேற்றுபவள்) என்று பெயர் சூட்டியுள்ளனர்.

க்ருபணஜனகல்ப லதிகாம் க்ருதாபரா
தஸ்ய நிஷ்க்ரியாம் ஆத்யாம்
வ்ருஷகிரி நாத யேத்வாம
விதந்தி ஸம்ஸாரதாரிணீம விபுதா:

ஸ்ரீநிவாஸனும் திருமலையில் ஓர் ஸம்ஸாரம் நடத்துகின்றான்! அவ னுடன் வாழ்பவை பல. ஷாட்குண் யம் எனப் பேசப்படும் அவன் ஞானம், பலம், வீர்யம், ஐச்வர்யம், சக்தி, தேஜஸ் ஆகியவை அவனுடனே உள.

ஆனல் அவன் இல்லற விளையாட் டில் நீதான் முதன்மை பெற்றவள். ஏனெனில் நீ அவனுடன் இல்லாவிடில்

நன்மை பயக்கவேண்டி அவன் ஏனைய குணங்கள் தீமையல்லவா பயக்கும்!

ஆம், என் பாபங்களைக் கண்டு சீறு கின்றன அவன் திவ்யாயுதங்கள். நீ அவனோடு நின்று என்மேல் உன் அருள் ஒளியை வீசும்போது இவைகள் சாந்த மாக இருப்பதுமட்டுமல்ல, என்னை வரவேற்கவும் செய்கின்றன. அவை களைக் கண்டு அஞ்சவேண்டிய நான் உன் ஸாந்நியத்தினால் அவைகளையும் வணங்கிப் பூசிக்கின்றேன்.

அழிக்கப் புரண்டோடும் அவன் சக்திகளை காக்கத் திசை திருப்புபவள் நீதானம்மா!'' என்பான் கவி.

''வ்ருஷகிரி க்ருஹமேதி குணாः
போத பல ஐச்வர்ய வீர்ய சக்தி
முகாஃ
தோஷாபவேயு ரேதே³
யதி நாமதயே த்வயா விநாபூதாः''

உயிரினங்கள் பிறவி முதல் மரண பரியந்தம் ஓயாது செயல்படுகின்றன. என்ன செயல்? மறுபடியும் பிறக்க ஹேதுவான செயல்களையே.

தாய் தயாதேவி, தன் குழந்தைகள் இப்படி ஸதா விளையாடினால் அவை களின் உடலும் உள்ளமும் ஒருங்கே கெடுமே என்று சோகிக்கிறாள்! வேங் கடநாதன் உள்ளத்தில் ஒரு ஸங்கல் பத்தைத் தூண்டுகின்றாள். அச்சத்ய ஸங்கல்பன் ஒரு பிரளயத்தையே உரு வாக்குகின்றான். எல்லா உலகும் உயி ரும் ஒடுங்கி செயலற்று மறைகின்றன. எங்கே? அவனிடத்திலேயே.

உடலையும் உள்ளத்தையும் இந்திரி யங்களையும் இழந்து ஒரு ஸூக்ஷ்மமான உடலில் அவன்பால் எல்லா உயிர் களும் உறங்கிவிடுகின்றன.

படைப்பு முதல் பிரளயம் வரை செயலாற்றி அநேகமாக பாபங்களையே செய்துவரும் ஆன்மாக்கள் இப்படி ஒடுங்குவது அவன் லீலையாகப் பேசப் படலாம். தயையால் தூண்டப்பட்ட இவ்விளையாட்டும் ஆன்மாக்களின் நன்மைக்கே என்று பேசுவது இச்சுலோ கத்தின் ஒலி.

ஆஸ்ருஷ்டிஸந்ததானாம்
அபராதானாம் நிரோதிநீம் ஜகதः
பத்மா ஸஹாய கருணே
ப்ரதிஸஞ்சர கேளிமாசரஸி.

இப்படி ஒடுங்கிய உயிர்கள் மறுபடி யும் செயல்பட்டு ஒரு நல்வாழ்வு பெற தயா தேவியும் செயல்படுகிறாள். வேங் கடவனோடு பேசாமல் பேசுகிறாள்.

''ஸ்வாமீ பிரளயத்தால் எல்லா உயிர்களும் செயலிழந்து மங்கிக் கிடக் கின்றனவே''.

''ஆம், அதற்கு என்ன செய்யவேண் டும்?''

''மறுபடியும் ஸ்ருஷ்டிப் பணியை மேற்கொள்ளுங்கள்.''

''ஸ்ருஷ்டித்து?''

''இவைகளுக்கு உடல், கரணங்கள், உள்ளம், இந்திரியங்கள் எல்லா வற்றையும் அளியுங்கள்.''

''ஏன்? மறுபடியும் சுழன்று சுழன்று வீழவா?

''ஏன் அப்படிப் பேசுகிறீர்கள். அவர் களுக்கு அறிவைக் கொடுங்கள். நல்வாழ்வுக்கு வழி காட்டும் சாஸ் திரங்களை உண்டு செய்யுங்கள்''.

''ஆமாம், இப்படியெல்லாம் எத்த னையோ ஸ்ருஷ்டியில் செய்தா யிற்று''.

இப்படியெல்லாம் இறைவன் உள் ளத்தில் தயா தேவி திகழ்ந்து நாம் நல்வாழ்வடைய ச்ருஷ்டி என்று ஓர் அவகாசத்தை யுண்டு செய்கிறாள். இதன் மனவோட்டமே இந்த ஸ்லோகம்.

அசித விசிஷ்டானப்ரளயே
ஜந்தூன் அவலோக்ய ஜாத நிர்வேதா
கரண களேபர யோகம்
விதரஸி வ்ருஷசைலநாத கருணே
த்வம்.

''பிரளயத்துக்குப் பின் சிருஷ்டிக்கப் பட்ட உன் குழந்தைகள் பின்னர் நல் வழிப்பட்டு வாழவேண்டும் என்ற அக் கறையும் உன்னிடம் உண்டு. எனவே

திருச்சானூர் சக்கரஸ்நானத்தின்போது, சந்தனம் மற்றும் மஞ்சள் காப்புடன் ஸ்ரீ பத்மாவதி தாயாரும், ஸ்ரீ சக்கரமும்.



தான் எப்பொழுதும் ஒளி வீசி நல் வாழ்வுக்கு வழிகாட்டும் பல சாஸ்த்திரங்கள் மலர்கின்றன.

பிரபஞ்சக் குழந்தைகள் வாழ நீ செய்யும் க்ருஷிகள்தான் எத்தனை! உன் அன்பின் வலிமைதான் என்னே! என்று பேசுகின்றது இச்செய்யுள்:

அநுகுண த சார்ப்பிதேன
ஸ்ரீதரகருணாஸாமாஹிதஸ்நேஹா
சமயஸி தம: ப்ரஜாநும்
சாஸ்திரமயேன ஸ்திரப்ரதீபேன.

திருமலையில் தோன்றிய கற்பகத்தரு. ஆனால் அவன் திருவடியில் தோன்றுவது தயை என்னும் பாரிஜாதம். மக்கள் தம் குறைகளைப் பேசி வணங்கும் இப் பாரிஜாதம் துளிர்த்துப் புத்தொளி வீச அதில் இலைகள் தோன்றுகின்றன. ஏன்? வழிதப்பித் திரிந்த தன் குழந்தை வழி தெரிந்து வேங்கடவனை அண்டிவிட்டான் என்ற சந்தோஷம். இவ்இலைகளின் பசுமையொளியே ஸ்ரீநிவாஸன் திருமுக மண்டலத்தில் படர்கின்றது. மகிழ்கின்றான். மறுகணமே மக்கள் சுலபமாக எட்டிப்பறிக்கக்கூடிய பழங்கள் தோன்றுகின்றன-

இப்படி ஐஹிக ஆமுஷ்மிக பலன்களை மக்கள் எளிதில் அடையச் செய்வதற்குத் தயா தேவியின் அன்பே காரணம்.

ரூடா வ்ருஷாசலபதே:
பாதே முககாந்தி பத்ரளச்சாயா
கருணே ஸுகயஸிவிநதான்
கடாக்ஷவிடபை: கராபசேயபலை:

திருவேங்கடமுடையானைச் சேவிக்கும் பக்த கோடிகள் அவன் திருக்கண்களின் குளிர்ந்த பார்வையையும் கரை புரண்ட கருணை ஒளியையும் ஸேவித்து ஈடுபடுகின்றனர். எத்தனையோ ஆழ்வார்களும் அனுபூதிமான்களும் இந்த ஈடுபாட்டை பரக்கப் பேசியுள்ளனர். இதற்குக் காரணம்?

''ஹே! தயா தேவி, அவனுடைய சந்திரன்போன்ற கண்களின் நட்பை நீ பெற்று அங்கேயே வாழ்கின்றாய். ஸேவிக்கவரும் சேதனர்கள் எத்தகைய பாபிகளேனும், எம்பெருமான் சீற்றங் கொண்டு கண்கள் சிவக்கவிடாமல் அக்கண்கள்மூலம் அவன் கருணையை வெள்ளமிட்டோடச் செய்கின்றாய்.

பிறந்தவர்கள் திருமலை சென்று திருவேங்கடவனைச் சேவிக்க வேண்டும் என்ற எண்ணம் தோற்றுவதே நீ செய்யும் கருணைக் காரியமல்லவா எனவே அவர்கள் வரவை எதிர்நோக்கியபடி நீ ஸ்ரீநிவாஸன் திருக்கண்களில் நித்யவாஸம் செய்கிறாய்.''

இந்த ஸ்லோகத்தில் ''தாராமைத்ரீம், ததாநயா, ஜநிமான் என்ற பதங்கள் தாரை சந்திரனையடைந்து ஸௌம்யமான புதனைத் தோற்றுவித்தது என ஒலிப்பதில், சாந்தியும் நிறைவும் பெற்ற தயா தேவி பெருமான். திருக்கண்களையடைந்து நமக்கு அளிக்கின்றாள் என்றஒலி கேட்டு ரஸிக்கலாம்.

ஸ்லோகம் பின்வருமாறு:

நயனே வ்ருஷாசலேந்தோ:
தாரா மைத்ரீம் ததானயா கருணே
த்ருஷ்டஸ் த்வயைவ ஜநிமான்
அபவர்க்கமக்ருஷ்டபச்ய மநுபவதி.

பரண் கட்டி பயிர் காப்பான் வேளாளன். அப்படியே ஸ்ரீநிவாஸன் ஸப்தகிரிமேல் நின்று தன் சேதனர்களான பயிர்களைக் காக்கின்றான்.

பயிர் செழிக்க நல்ல உரமிடுதல் போல் சேதனர்க்கு அறிவையும், பயிர்கள் நன்றாய் வளர பூச்சிகள் அண்டாமலிருக்கச் செய்வது, களையெடுப்பதும் என்ற பணிகளைப் போன்று சேதனர்க்கு காம க்ரோதாதிகள் பீடிக்காமலும் அவர்களை இம்சிக்கும் துஷ்டர்களை ஒழித்தும் காக்கின்றான்.

ஆனால் அவனுடைய இந்த பிரபஞ்ச க்ருஷி பலிக்க வேண்டுமானால் பயிர்களுக்குக் காலத்தில் நீர் பாய்ச்ச வேண்டுமே. ஹே! தயா தேவியே நீயன்றோ அத்தகைய ப்ரவாகம். இந்த குளிர்ந்த நீர் இல்லாவிடில் அவன் தான் இந்த க்ருஷியை மேற்கொள்ள முடியுமா? சேதனர்கள் என்ற பயிர் தான் செழித்து வளருமா? என்று பேசுகின்றது தயா சதகத்தின் இருபத்தொன்றாவது ஸ்லோகம்?

அது வருமாறு:

ஸமயோப நதை: தவப்ரவாஹை:
அநுகம்பே க்ருத ஸம்ப்லவா தரித்ரீ
சரணாகத ஸஸ்ய மாலி நீயம்
வ்ருஷசைலேச க்ருஷீ வலம்திநோதி.

(தொடரும்)

## அறிவிப்பு

சந்தாதாரர்கள் தங்களுடைய சந்தாத் தொகையினை ஒவ்வொரு மாதத்தின் 15ஆம் தேதிக்குள் மார்க்கெடிங் ஆபீஸர், பப்ளிகேஷன் செக்ஷன், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருப்பதி என்ற முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். அப்போதுதான் அவர்களுக்கு அடுத்த மாசத்திலிருந்து 'ஸப்தகிரி' பத்திரிகையை தொடர்ந்து அனுப்ப ஏதுவாக இருக்கும். இருப்பில் பிரதிகள் இருப்பின் அம்மாதத்திலிருந்து (பணம் அனுப்பும் மாதத்திலிருந்து) ஸப்தகிரி பத்திரிகைகள் அனுப்பி வைக்கப்படும். எம். ஓ. கூப்பனில் புதிய சந்தாதாரர்கள் எந்த மாதத்திலிருந்து பத்திரிகை வேண்டும் என்பதைத் தெளிவாக எழுதுதல் வேண்டும். தொடர்ந்து தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளும் சந்தாதாரர்கள் மறக்காமல் எம். ஓ. கூப்பனில் தங்கள் சந்தா எண்களை குறித்தல் வேண்டும். ஸப்தகிரி மற்றும் தேவஸ்தான வெளியீடுகளுக்கான தொகையினை 'மார்க்கெடிங் ஆபீஸர், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருப்பதி' என்ற முகவரிக்கு அனுப்புதல் அவசியம்.

# மறை பொருள் அமைந்த மந்திரங்கள்

திரு. கே. வி. இராஜன்,
மதுரை.

''வழுதலை வித்திடப் பாகல் முளைத்து
புழுதியைத் தோண்டினேன் பூசணி
பூத்தது
தொழுது கொண் டோடினர்
தோட்டக் குடிகள்
முழுதும் பழுத்தது வாழைக் கனியே''

—திருமூலர் திருமந்திரம்.

திருமந்திர நூல், மந்திரம் என்பதற்கு ஏற்பப் பல மந்திரங்கள் மறை பொருள்களைத் தம்மிடத்தே கொண்டு திகழ்கின்றன. தோட்டப் பயிர்களைப் பற்றிய சொற்களைக் கொண்டு திகழும் இம்மந்திரம் எவ்வளவு மாறுபாடான நிகழ்ச்சிகளை மேல் போக்காகக் கொண்டிருப்பதை நாம் அறிகிறோம். வழுதலங் கத்திரிக்காய் விதையை விதைத்தேன். விதைக்கு ஏற்பக் காய்க்காமல் பாகல்காய் முளைத்தது. பின் மண் புழுதியைத் தோண்டினேன். பூசணி பூத்தது. இதைக் கண்டு ஓடிவிட்டனர் தோட்டக்காரர்கள். பின்னர், வாழைப் பழம் பழுத்தது என்பது நன்கு புலப்படும், இப்பாட்டின், உள்ளே மிளிரும் பொருளை நன்கு அறிய, இதற்கு காரணமாயுள்ள திருமூலரை ஆராய்வோம்.

சுந்திரமூர்த்தி சுவாமிகள் 'நம்பிரான் திருமூலர்' என்று இவரைப் பாடி உரிமை கொண்டாடினர். நம்பியாண்டார் நம்பியோ 'என் உச்சி அடிமன்ன வைத்தபிரான் மூலன்' என்று தம் சிரமேல் அவரது திருவடிகளை வைத்துப் போற்றினர். ஒரு புலவர் 'திருமூலர் தேவனையே சிந்தை செய்வார்க்கு கருமூலம் இல்லையே காண்' என்று வற்புறுத்திச் சென்றார். தாயுமான ஸ்வாமிகளோ 'தவராஜ யோகி யெனும் மிக்க திருமூலன் அருள் மேவு நாள் எந்நாளோ' என்று பாடிப் போற்றுகிறார். எனவே மூலன் மரபே தனிச்சிறப்புடையது என்பதை யாவரும் பகர்ந்துள்ளனர்.

சேக்கிழார் பெருமானே 'நந்தியருள் பெற்ற நான்மறை யோகிகள்' என்றும் அணிமாதி வரும் சித்தி பெற்றுடையார் என்றும், அருள் புரியும் தவமுனிவர் யென்றும், நலம் சிறந்த ஞான யோகக் கிரியா சரியை எலாம் மலர்ந்த மொழி திருமூலத்தேவர் யென்றும், சிறப்பித்துக் கூறுகின்றனர். வேதங்களை நன்குணர்ந்து, எண்வகை சித்திகள் கைவரப் பெற்று, திருமந்திரத்தை உபதேசித்தவர் திருமூலர்.

ஆனல், அவர் கூறிய பாட்டின் உட்பொருள் ''யோகப் பயிற்சியை மேற்கொண்டேன். அதனல் வைராக்கியம் வளர்ந்தது. தத்துவங்களை ஆராயத் தொடங்கினேன். இவ்வாராய்ச்சியின் பயனுய் சிவம் வெளிப்பட்டது. சிவம் வெளிப்பட்டதும் ஐந்து இந்திரியங்களும், தொண்ணூற்ரு று தத்துவங்களும் நீங்கின. அதன் பின் திருவடிப் பேருகிய ஆன்மலாபம் கிடைத்தது'' என்கிருர். இங்கே வழுதலை வித்து யோகப் பயிற்சியினையும், பாகல் வைராக்கியத்தையும், புழுதியைத் தோண்டல் தத்துவ ஆராய்ச்சியையும், பூசணி சிவத்தையும், தோட்டக் குடிகள் இந்திரியாதி விஷயங்களையும், வாழைக்கனி ஆன்ம லாபத்தையும் உணர்த்துகின்றன.

இரண்டு கடாவுண்டு இவ்வூரின்
உள்ளே
இரண்டு கடாவுக்கும் ஒன்றே தொழும்
பண்
இரண்டு கடாவும் இழுத்துப் பிடிக்கில்
இரண்டு கடாவும் ஒருகடா ஆகுமே.''

இந்த மந்திரத்தில் மேற் பொருள், இவ்வூரில் இரண்டு கடா மாடுகள் உள்ளன. கடாக்களை மேய்ப்பவன் ஒருவனே. இவ்விரண்டு கடாக்களையும் இழுத்துப் பிடித்தால் அவ்விரண்டு கடாக்களும் ஒரு கடாவாக மாறும் என்பது. ஆனல் இதன் உட்பொருள் வேறு. அதாவது, இவ்வுடம்பில் இரேசம், பூரகம்என்னும் இரண்டு கலைகள் உள்ளன. இக்கலைகளை நடத்துவது ஜீவாத்மா. இஜ்ஜீவாத்மா இரு கலைகளைத் தம்போக்கில் போகவிடாமல் தடுத்துக்குடும்பத்தில் அமைத்தல் வேண்டும்என்பது. மேலும், விளக்கப் புகுந்தால், இடகலை, பிங்கலை வழியேவரும் காற்றை அடக்கி யோகம் புரிதல்வேண்டும் என்பது.

மற்றும் ஒரு திருமந்திரம், எங்ஙனம் விளக்கிக் காட்டுகின்றது என்பதை ஆராய்வோம்.

''பார்பான் அகத்திலே மாற்பசுஐந்துண்டு
மேய்ப்பாரும் அன்றி வெறித்துத்திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும்
அடங்கினல்
பார்ப்பான் பசு ஐந்தும் பாலாய்ச்
சொரியுமே.''

இதன் வெளிப் பொருள், பார்ப்பானுடைய வீட்டில் பால்தரும் பசுக்கள் ஐந்து உள்ளன. அவை மேய்ப்பார் இல்லாத காரணத்தால் வெறித்துத் திரிகின்றன. அப்பசுக்களை அடக்கி மேய்க்கும் இடையன் ஏற்பட்டால், அவை பால் நன்ருகச் சொரியும் என்பதாகும். இதன் உட்பொருளோ, உடலில் உள்ள ஐந்து இந்திரியங்கள் உள்ளன. அவைகள் உலக விஷயத்தில் ஈடுபட்டு உழல்கின்றன. அவற்றை அவ்வாறு போக ஒட்டாமல், ஞானசரியன் வந்து உபதேசிக்கும் பொழுது, ஆனந்தம் பிறக்கும் என்பதாகும்.

இங்கே பார்ப்பான் படைக்கும் தொழிலை காரணமாகக் கொண்ட பிரமனையும், அகம் அவனல் படைக்கப்பட்ட சரீரத்தையும், பசுக்களை, பஞ்சேந்திரியங்களான மெய், வாய், கண், மூக்கு, செவி, இவைகள் வெறித்துத் திரிவது உலகப்பற்றில் ஈடுபடுவதையும், பாலாய் சொரிதல் ஆனந்தம் விளைத்தலையும் உணர்த்திக் கூறுகின்றன.

இதுபோன்ற திருமந்திரங்கள், மறைபொருள்களை தன்னுள் அடக்கி வைத்துக் கொண்டு, ஊடுருவிப் பாயும் ஆராய்ச்சிகளுக்கு செவ்வனே வெளிப்படுத்தி நன்மை பயக்கும் என்பதில் ஐயமில்லை. ★

# கலிய பெருமாள் கோவில்

திரு. வே. ஸ்ரீநிவாஸன்,
திருச்சி.

''கலியுகத்தில் பிரத்தியக்ஷ தெய்வம்'' என வழங்கும் ஸ்ரீவரதராஜப் பெருமாள் திருச்சிராப்பள்ளி ஜில்லா அரியலூருக்குச் சுமார் 3 மைல் தூரத்தில் உள்ள கல்லன்குறிச்சி கிராமத்தில் திருக்கோயில் கொண்டிருக்கிறார். இந்த இடத்தை கலிய பெருமாள் கோவில் என்று அழைக்கிறார்கள்.

இந்தக் கிராமத்திலும், சுற்று வட்டாரங்களிலுள்ள ஜனங்களுக்கும் கலிய பெருமாளுக்கு ''வேண்டிக் கொள்ளுதல்'' பரம்பரை வழக்கமாக இருந்து வருகிறது. விசேஷ தினமாகக் கருதப்படும் சனிக்கிழமைகளில் ஏராளமான ஜனங்கள் இக்கோயில் தரிசனத்துக்கு வருகிறார்கள். பிரார்த்தனைகளில் முடியெடுப்பது, உண்டியல் காணிக்கை செலுத்துவது இவைகளைத் தவிர பலவகை தானியங்கள், ஆடு, மாடு, கோழி முதலியவைகளும் கோவிலுக்கு சமர்ப்பிக்கப்படுகின்றன. பிரார்த்தனையாக விடப்பட்டிருக்கும் சில புள்ளிமான்கள்கூட இந்தக் கோயிலில் காணலாம்.

## கலி தீர்க்கும் கம்பப்பெருமாள்:

இந்தக் கோயிலில் மூல விக்கிரகத்துக்குப் பதிலாக சுமார் 15 அடி உயரமுள்ள ஒரு தூண் இருக்கிறது. இதில் வரத ராஜப்பெருமாள் ஐக்கியமாக இருப்பதாகக் கருதி ஆராதனை செய்து வருகிறார்கள். பதினாறு பட்டைகள் உள்ள இந்தத் தூணின் அடிப்பாகத்தில் ஆஞ்சநேயர் வடக்கு நோக்கிக் கை கூப்பிக் கொண்டிருக்கும் உருவம் செதுக்கப்பட்டிருக்கிறது. தூணின் இரு பக்கங்களிலும் சங்கு, சக்கரம் காணப்படுகின்றன. இந்தத் தூணை கம்பப்பெருமாள் என்று அழைக்கிறார்கள். இந்தக்கம்பப்பெருமானின் காட்சியும் பக்தர்களின் கோஷமும் சேர்ந்து தரிசனத்துக்கு வருபவர்களை மெய் மறக்கச் செய்கின்றன.

## தலபுராணம் :

சுமார் 200 வருடங்களுக்கு முன்னர் 'மங்கா படையாச்சி' என்ற ஒரு பக்திமான் பக்கத்து கிராமத்தில் வசித்து வந்தார். ஒரு சமயம் அவருடைய 'சினைப் பசு' காணமற் போய்விட்டது. அதைத்தேடி அலுத்து மனம் வருந்தியிருக்கையில் கடவுள் அவர் கனவில் தோன்றி ''அன்ப, உன் துயரம் விட்டொழிக. உனது பசு பத்திரமாகவே இருக்கிறது. அது கல்லன் குறிச்சி கிராமத்திலுள்ள மகாலிங்க மரத்தடியில் உளது'' என்று கூறி மறைந்தார். மங்காப் படையாச்சி உடனே ஓடோடி வந்து, கனவில் கூறப்பட்ட இடத்தையடைந்து தன் பசுவையும் அது ஈன்ற கன்றையும் கண்டு மன மகிழ்ந்து அவைகளை வீடு கொணர்ந்தார். மரத்தடியில் சாய்ந்து கிடந்த ஒரு கல் தூண் இவர் கண்ணில் பட்ட போதிலும் அதனுடைய மகத்துவத்தை அப்போது அவர் தெரிந்து கொள்ளவில்லை. சில தினங்களுக்குப் பிறகு இறைவன் மறுபடியும் அன்னவரின் கனவில் தோன்றி ''பக்தா, மரத்தடியில் சாய்ந்து கிடந்த கல் தூணைக் கண்டாயல்லவா? அதில்நான் அவதரித்திருக்கிறேன். அதை நிறுத்தி பூசித்து வந்தால் நன்மை ஏற்படும்'' என்று சொல்லி மறைந்தார்.

இந்தச் செய்தியை பக்தர் எல்லோரிடமும் தெரிவிக்க கம்ப மூர்த்தியை பிரதிஷ்டை செய்து எல்லோரும் வணங்கி வந்தார்கள். இன்றும் படையாச்சியாரின் குடும்பத்தார்களே இந்தக் கோயிலின் தர்ம கர்த்தாக்களாக இருந்து வருகிறார்கள்.

## பிரும்மோற்சவம் :

இந்தக் கோவிலில் ஆண்டு தோறும் ஸ்ரீராம நவமியிலிருந்து தொடங்கும் பிரும்மோற்சவத்திற்கு ஏராளமான பக்தர்கள் தரிசனத்துக்கு வருகிறார்கள். புரட்டாசி மாதச் சனிக்கிழமைகளும் புனிதமாகக் கருதப்பட்டு வருகின்றன.



## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.

# சந்திரன்

நவக்கிரக மண்டலத்தில் சூரியனுக்கு அடுத்த கிரகமாக பவனிவரும் சந்திரன் வாரதேவதையாக ஞாயிறை தொடர்ந்து திங்களாக திகழ்கிருன். தண் கதிரோன் என குளிர்ந்த சூரியனுக குறிக்கப்படுகின்ற இவன் சூரியனேடு சேர்த்து 'இரு சுடர்' என்று அழைக்கப்படுகின்ருன்.

ஒஷதீட்யாய, ஸர்வ ரக்ஷகாய என துதிக்கப்படுகின்ற இவன் மூலிகைகளேயும், பயிர்களேயும் வளர்ப்பவன் என்று சாஸ்திர நூல்கள் நிரூபிக்கின்றன. இஃது தற்கால கவிதை ஒன்றிலும் காணப்படுகிறது.

' நன்னிலத்தின் பயிர் வளர்ப்பாய்'

தாரகைகளின் தலேவன், குழந்தைகளே குதூலிக்க வைப்பவன், குளிர்ச்சி பொருந்தியவன், கவிகளுக்கு தலேவன், கற்பனையை ஊறவைப்பவன், தேவர்களுக்கு உகந்தவன். 'தேவர்கள் அமுது கடைந்த பொழுது தூணுக நின்று உதவியதோடு, அதில் தோன்றிய ஆலகால விஷத்தின் கொடுமை தணியும்படி அக்கடலில் அமுதுடன் அவதரித்தவன்' என்று அவன் தோற்றத்தை காட்டுகிறது பாரதம். 'ஸுதாநிதயே' எனும் நாமாவளி மூலம் அமுதத்தை உண்டாக்கியன் என அறிகிறோம்.

இவனது மண்டலம் மதிதலம்; இவனுக்குரிய மணி முத்து; நிறம் வெக்கில நிறம்; மலர் வெள்ளே அல்லி; ராசி கடகம். இவன் வம்சத்தினர் பாண்டியர். இவை திருவிளேயாடற் புராண வழி சந்திரன் பற்றிய செய்திகள்.

'கர்கடப்ரபவே',—கடக ராசிக்கு அதிபதி, 'ஆதித்யாய ச ஸோமாய' ஸோமன் என வழங்கப்படுபவன். தேய்தல், வளர்தல் எனும் கலேயை கொண்டவன். எட்டாந்தன்மதியான இவனே சிவனுர் சூடியுள்ளதை சுந்தரர்



'பித்தா பிறை சூடி' என குறிப்பிடுகிருர்.

வேதங்கள் முதல் ஒளிர்கின்றவன் தற்கால கவிதைகள் வரை தண் ஒளி வீசுகின்ருன். உலகத்திருளே தன்னகத்தே வாங்கி ஒளியை வீசுகின்றவனே 'கறைபட்டுள்ளது வெண்கலேத் திங்கள்' என முக்கூடற்பள்ளும், 'மைஞ்ஞீலம் மதிகாட்டும்' என சேக்கிழாரும், 'தோஷாகராய', 'க்ஷீணபாபாய' என நாமாவளியும் குறிக்கிறது. நிழல் போன்ற கறையை உடையவன், சசி, சசாங்கன் என அழைக்கப்படுகின்ருன்.

இவனும் 'சுயம் பிரகாச பரப்பிரம்மம்' என கீதை கூறுகிறது. 'கலாயாய' என்ற நாமாவளி மூலம் கலேகள் பல கொண்டவன் என அறிகிறோம். இவன் தன் கலேகளே சூரியனுக்கு அளித்துவிட்டு பிறகு பெற்றுகொள்கிருன் என்பது கருத்து. 'சித்திரை மாதம் பௌர்ணமியில் சித்திரை நட்சத்திரம் சந்திரனுடன் கூடியிருப்பது போல' என்ற அயோத்திய காண்ட கருத்துமூலம் சித்திரை பௌர்ணமி சிறப்பையும், மற்றும் 'ரோஹிணி தேவி சந்திரனே அடைந்திருப்பது போல்' என்ற வரி மூலம் சந்திரன் தேவி ரோஹிணி என்பதையும் அறிகிறோம்.

'' திங்களேப் போற்றுதும்
திங்களேப் போற்றுதும்
கொங்கலர் தார்ச்சென்னி
குளிர் வெண்குடைபோன்றிவ்
வங்கண் உலகளித்த லான்''

என்று சிலப்பதிகாரம் திங்களேப் போற்றுகிறது. காதல் தெய்வம் என பாரதியால் பாடபெற்றவன், குமுத மலரை மலர செய்பவன். நட்சத்திரங்களாகிய எழுத்துக்களே பொறித்த வானமாகிய ஏட்டை இருளென்னும் மையைத் தடவி நிலாவென்னும் வெள்ளேத் துணியால் துடைப்பதற்குக் கடல் மீதே எழுந்தான் சந்திரன் என ஓர் பாடல் கூறுகிறது.

'' சேய தாரகை வருணமாத்
தீட்டிய வானம்
ஆய ஏட்டினே இருளெனும்
அஞ்சமை தடவிச்
தூயவான் எனும்வெண்
தூசினுல் துடைப்பான்
பாயவேலேயில் முளேத்தனன்
பனிமதிக் கடவுள்''

சோதிட நூல்கள் மூலம் சந்திரனே ஆயுங்கால் பெண் கிரகமான சந்திரன் இரவில் மாதா, பகலில் மாதா சகோதரி, இடக்கண் ஆவன். வளர் பிறையில் சுபக்கிரகம், தேய்பிறையில் பாபக்கிரகம். கிரகபூதம்—ஜலம். ராசி கர்கடகம். இவன் வியாழன் நிற்கும் இராசிக்கு 6, 8, 12-ம் இராசிகளில் நின்ருல் சகடயோகம் தருவான்.

ஒன்பது கிரகங்களுக்கும் மாரகத் தன்மை உண்டு. சந்திரன் மாரகனுகில் செய்ய வேண்டிய சாந்தி வெள்ளல்லிப் புஷ்பத்தினுல் அர்ச்சனே, நமஸ்காரம், முருக்கம் சமித்தினுல் ஓமம், வெள்ளேப்

எஸ். உமாமகேஸ்வரி B.Sc.
தஞ்சாவூர்




திருமலை திருப்பதி தேவஸ்தான

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்) கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |
| தோமாலை ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |
| அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்) பிறகு தரிசனம் | ,, | 4 |
| ஏகாந்த ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| திருமஞ்சனம் ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கம்பூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2000 |
| திருப்பாவாடை | ,, | 4000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2000 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 450 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 225 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்குழல் | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.
மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.




# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

மற்றும்

# ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

## தி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

### ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் | ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில் |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| அர்ச்சனை | டிக்கெட் ஒன்று | 2-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| சகஸ்ரநாம அர்ச்சனை | ,, | 5-50 | 5-00 |
| தோமாலந்தார தரிசனம் | | 5-00 | — |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அம்மையார் கோயில் | ஸ்ரீ பார்வதி அம்மையார் கோயில் |
|---|---|---|---|
| அர்ச்சனை | ,, | 1-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| நைவேத்தியங்கள் | | ரூ. |
|---|---|---|
| தத்யோதனம் | முழுத் தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொங்கல் | ,, | 60-00 |
| இனிப்புப் பொங்கல் | ,, | 65-00 |

குறிப்பு: ஒவ்வொரு நைவேத்தியத்திற்கும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொண்டு சிங்கமொருவுக்காக ரூ. 3/- செலுத்த வேண்டும். மேலும் அரைக்கட்டண விகிதத்தில், இறைவனுக்கு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள் செய்விக்கலாம்.

பசுத்தானம் அம்பாளுக்கு விசேஷ அபிஷேக ஆராதனை, சக்தி சகஸ்ர நாம பாராயணம். சந்திரனுக்குரிய தசை 10 வருடங்கள்.

சந்திரன் நம் தேகத்தில் மனம், இரத்தம், மாதா ஆகியவற்றிற்குரியவன். அதாவது ஒரு ஜாதகன் சுத்தமான மனம் உடையவனு, அவனது இரத்தம் சுத்தமானதா, அவன்தாய் சுகமாக நீண்ட நாள் வாழ்வாளா என்பன போன்ற விஷயங்களைச் சந்திரன் நிலையைப் பார்த்து அறியலாம்.

நவக்கிரகங்களில் நின்ற நிலையில் வெண்ணிற ஆடையில் திகழும் இத்தேவனை அவன் வாரத்தில், அவனுக்குரிய கோலத்தை ஸந்நிதியில் இட்டு, அவனுக்குரிய ஸ்துதியையும், ஸௌந்தர்ய லஹரி ஸ்லோகத்தையும் கூறி தியானித்தால் தடங்கல்கள் நீங்கப் படும்; முன்னேற்றமும் உண்டாகும்.

சந்திரனுக்கென்று தனிக்கோயில் இல்லை. இவனுக்குரிய க்ஷேத்திரம் திருப்பதி; மூர்த்தி ஸ்ரீவெங்கடாசலபதி, காயத்ரீ மந்திரம்.

பத்ம த்வஜாய வித்மஹே,
ஹேம ரூபாய தீமஹி ।
தந்நஸ் ஸோம: ப்ரசோதயாத் ॥

நவக்கிரகங்கள் இந்திராதி தேவர்களையும் ஆட்டி வைக்கும் சக்தி வாய்ந்தவை. ஆனுல் திருமலையில் உள்ள எம்பெருமானை சரணடைந்தவர்களுக்கு நவக்கிரகங்கள் யாதொரு கெடுதியும் செய்யாமல், ஸகல நன்மைகளையும் செய்யும் என்பது உறுதி.

ஸூர்யேந்து பௌம புத வாக்பதி காவ்ய ஸௌரி
ஸ்வர்பானு கேது திவிஷத்பரிஷத் ப்ரதா நா: ।
த்வத் தாஸ தாஸ சரமாவதி தாஸ தாஸா:
ஸ்ரீவெங்கடாசலபதே தவ ஸுப்ர பாதம் ॥



# அனுமன் கதை



## 16. பகைவனும் புகழ்ந்தான்!

நிருதனும் அனையவன் நிலைமை நோக்கியே
கருதவும் இயம்பவும் அரிதுன் கைவலி
அரியன முடிப்பதற் கனைத்து நாட்டினும்
ஒருதனி உனையிதற், குவமை யாதென்முன்.

262, கும்பகருணன் வதைப்படலம்.

இராமபிரான் பிரமபதத்தைத் தனக்கு வரமாக வழங்கியதற்கு நன்றி தெரிவிக்கும் வகையில் அனுமன் வணக்கமுடன் நின்முன். தென்திசைக் கடலைக் கடத்தற்குரிய வழிவகைகளை விபீடணன் இராமபிரானுக்கு விளக்கமாக எடுத்துச் சொன்னுன். விபீடணன் கூற்றுப்படி வருணனை நினைத்து இராமன் தியானித்தான். வருணன் வராமையினுல் சினங்கொண்ட இராமன் தன் வில்லில் பிரம்மாத்திரத்தைப் பூட்டினுன். இதுகண்ட வருணன் நடுநடுங்கி இராமன் திருவடிகளில் வந்து வீழ்ந்து வணங்கினுன். தன்மீது அணைகட்டினுல் தான்தாங்குவதாகக் கூறி, வருணன் இராமனிடம் விடை பெற்றுச் சென்முன். வருணன் சென்ற பிறகு, விபீடணன் வானரத் தலைவர்களுடன் அணைகட்டுதலைப் பற்றி ஆலோசித்தான். வானரத் தச்சனுகிய நளனிடம் அணையைக் கட்டும் பொறுப்பு விடப்பட்டது. வானர வீரர்கள் பலரும் மரங்களையும் மலைகளையும் பிடுங்கிக் கொண்டு வந்து கடலிலே போட்டார்கள்.

இராமதூதனுகிய அனுமன் மலைகள் பலவற்றைப் பெயர்த்துக்கொண்டு வந்து கடலில் போட்டான். அவன் போட்ட வேகத்தில் கடலில் இருந்த மீன்களும், கடல் நீர்த்துளிகளும் கடலைவிட்டு வானுலகைச் சேர்ந்தன. நீலன், மயிந்தன், அங்கதன் முதலானேரும் அணைகட்டும் பணியில் ஈடுபட்டனர். அனுமனது அழகிய தோளைப் போலப் பெருத்துள்ள குன்றத்தைக் கரடிப் பெரும்படைக்குத் தலைவனும் வயதில் முதிர்ந்தவனுமான சாம்பவான் கடலில் எறிந்தபோது தெறித்த நீர்த்துளி தேவர்களின் தலையில் சென்று வீழ்ந்தது. இவ்வாறு வானர வீரர்களின் உதவியினுல் அணை ஒருவாறு கட்டி முடிக்கப்பட்டது. அணைகட்டி முடித்த செய்தி கேட்டு இராமன் அகம்மிக மகிழ்ந்தான். அணையைக் கண்டு மகிழ்ந்த இராமன் நளனுக்குப் பரிசுகள் பல நல்கினுன். அணையைக் கடந்து அனைவரும் அப்பால் சென்றனர்.

கடலைக் கடந்து சென்ற இராமன் முதலான அனைவரும் இலங்கை நகரின் அழகிய தோற்றத்தைக் கண்டனர். இராமன் முதலானேர் வந்திருக்கும் செய்தியை இராவணன் ஒற்றர் மூலமாகக் கேட்டறிந்தான். அப்போது மாலியவான் என்பான் சீதையை விட்டுவிடுதலே போரை விலக்குதற்குரிய உபாயம் என்று எடுத்துக் கூறினுன். மாலியவானின் அறிவுரை செவிடன் காதில் ஊதிய சங்கானது! வானரச் சேனைகளைக் காணும் பொருட்டு இராவணன் இலங்கைக் கோபுரத்தின்மேல் ஏறி நின்முன்.

கோபுரத்தின் மேல் இருந்த இராவணனைச் சுக்ரீவன் கண்டு விட்டான். கோபம் மேலிட்ட சுக்ரீவன் இராவணன் மேல் பாய்ந்து, அவன் மணிமுடிகளில் பதிக்கப் பெற்றிருந்த மணிகளைத் தட்டிப் பறித்துக் கொண்டு வந்துவிட்டான். மகுட பங்கத்துக்காளான இராவணன் அவையினைக் கூட்டிப் போர் செய்வதற்காக வீரர்களை அணிவகுக்குமாறு உரியவர்களுக்குக் கட்டளையிட்டான்.

இலங்கையின் மேற்கு வாயிலில், அனுமன் பதினேழு வெள்ளஞ் சேனைகளோடு அரக்கரைப் பொருதற்குக் காத்து நின்முன். தெற்கு வாயிலில் அங்கதனும், கிழக்கு வாயிலில் நீலனும், வடக்கு வாயிலில் இராம இலக்குவரும் அணிவகுத்து நின்றனர். போர் புரிகின்ற வீரர்கட்குத் தேவையான சேனைகளை அவ்வப்பொழுது அனுப்பி வைக்குமாறும், வீரர்கட்குக் காய்கனி முதலான உணவு வகைகளைக் கொடுத்து உதவுமாறும், போர் நிலைகளை அவ்வப்போது அறிந்து வந்து சொல்லுமாறும் இராமபிரான் விபீடணனுக்குக் கட்டளையிட்டான். இந்தச் செய்திகள் அனைத்தையும் ஒற்றர்கள் அறிந்து சென்று இராவணனிடம் விளக்கமாக எடுத்துக் கூறினர்.

இராவணன் தனது ஆயிரம் வெள்ளஞ் சேனைகளையும் அணிவகுத்து

திரு. மா. சிதாராமன், M.A., BEd.,
பெருங்கட்டூர்.



## ஸ்தூலத்தில் ஸூக்ஷ்மம்

வங்கிபுரம். ரங்கசுவாமி ஐயங்கார், திருச்சானூர்.

மாவு அரைக்கிருள் ஒரு பெண் மணி. சன்யாசி ஒருவன் அங்கு வந்து சற்று நேரம் பார்த்துவிட்டு அழத்தொடங்கினுர். அப்பெண் அவரைப் பார்தது "நீங்கள் யார்? ஏன் அழுகிறீர்கள்? என்ன வேண்டும்?' என்ருள்.

**சன்யாசி :** நான் யாராயினும் என்ன? இதைக்கண்டு தான் வருந்துகிறேன்.

**பெண் :** நீர் மாவு அரைப்பாரையே கண்டதில்லையா? வருத்தமேன்?

**சன்யாசி :** உலகத்தார் கெடுவதைக் கண்டு தான் வருத்தம்.

**பெண் :** ஏனைய்யா? மாவு அரைப்பதற்கும் உலகத்தார் கெடுவதற்கும் என்ன சம்பந்தம்?

**சன்யாசி :** அம்மா! தயவு செய்து அந்த மேல் கல்லை எடுத்து விடு.

**பெண் :** ஆம்! எடுத்தேன். என்ன கண்டீர் இதனுல்?

**சன்யாசி :** கீழ்க்கல்லின் நடுவேயுள்ள அச்சுதான் பகவான். மேல் கல் தான் உலகம். அவர்மேல் ஆதாரப்பட்டது. காலத்தினுல் சுழல்கின்றது. ஒவ்வொரு அரிசியும் ஒரு ஜீவாத்மா. அச்சை அண்டியிருக்கும் அரிசிகளுக்கு அழிவு இல்லாததுபோல் பகவானை அணுகி இருப்போருக்கு அழிவில்லை. அச்சைவிட்டு விலகிய அரிசிகள் உருக்குலைந்தன. அவ்வாறே பகவானை அணுகாதவர் நாசமடைவர் என்பதுதான் நான் கண்ட உண்மை.

**பெண் :** ஆஹா! என்ன ஆச்சரியம்! நான் இந்த ஏந்திரத்தில் எவ்வளவு நாள் எவ்வளவு மாவு அரைத்திருப்பேன். ஒரு நாளாவது இவ்விதம் எனக்குத் தோன்றவில்லையே! நீங்கள் மஹாத்மாதான். நீங்கள் யார் என்பதையும் அறிந்தால்தான் என் மனம் சாந்தமடையும்.

**சன்யாசி :** அம்மா! என்னைத் தான் கபீர் என்பார். எனக்கு எதைக் கண்டாலும் பகவான் என்றே தோன்றுகிறது. இவ்வுலகிலுள்ள எல்லா வஸ்துக்களும் உயிரில்லாவிடினும் பேசுகின்றன என்பதுதான் என் கொள்கை. இதைத் தான் பெரியோர் "ஸூக்ஷ்மத்தில் மோக்ஷம்" என்பார்.

**பெண் :** உங்கள் தரிசனத்தால் என் ஜன்மம் இன்றுதான் முழுமையடைந்தது (என்று கூறி பெரியவரை விழுந்து வணங்கினுள்.) ★

நிற்குமாறு கட்டளை பிறப்பித்தான். இராவணன் சேனை இலங்கையின் உட்புறத்தே நின்று இலங்கையைக்காத்து நின்றது. வானர சேனை இலங்கையின் வெளியிலிருந்து இலங்கையை முற்றுகை செய்தது.

இதற்கிடையே, இராமபிரான் விபீடணன், சுக்ரீவன், இலட்சுமணன் முதலானேரைக் கலந்தாலோசித்து இராவணனிடம் தூது செல்லுமாறு அங்கதனை அனுப்பினுர். அங்கதனும் இராவணனைச் சேர்ந்து "தேவியை விடுதலே அறமும் உரமும் ஆகும்!" எனக் கூறினுன். மூர்க்கனுன இராவணன் சமாதானத்திற்கு வராததால் போர் செய்தலே செய்யத் தக்கது என்ற முடிவை அங்கதன் இராமபிரானிடம் எடுத்துக் கூறினுன்.

சேனைத்தலைவர்களின் கட்டளைப்படி வானர வீரர்கள் இலங்கையின் அகழியைத் தூர்த்தனர். கோட்டையின் மதிலை வளைத்துக் கொண்டனர். நான்கு வாயிலிருந்தும் அரக்கர் சேனைகள் புறப்பட்டுச் சென்றன. அரக்கர் சேனைக்கும் வானர சேனைக்கும் கடுமையான போர் நடைபெற்றது. இப்போரில், மேற்கு வாயிலில் இருந்த அனுமன் துன்முகன் என்னும் படைத்தலைவனையும் அவனுடன் இருந்த போர் வீரர்களையும் கொன்றெழித்தான். சுக்ரீவன் வச்சிர முஷ்டி என்பவனையும், நீலன் பிரகஸ்தன் என்பானையும், அங்கதன் சுபாரிசன் என்பவனையும் கொன்றெழித்தனர். தன் படைகள் பங்கப்பட்டதை இராவணன் கேட்டறிந்தான். சினந்து போர்க்கெழுந்தான். இராமனும் போர்க்கோலம் தரித்தான்.

போர் செய்ய வந்த இராவணனுடன் அனுமனும் சுக்ரீவனும் இலக்குவனும் கடும் போர் புரிந்தனர். எனினும், இம்மூவரும் இராவணன் முன் நின்று வலிமையுடன் போர் செய்ய இயலவில்லை. எனினும், அனுமன் மட்டும் மனந்தளராது மீண்டும்

(23ஆம் பக்கம் பார்க்க)

# ஸ்ரீ பத்மாவதி மகளிர் கல்லூரி

*18-1-78* அன்று நடைபெற்ற கல்லூரியின் வெள்ளி விழா நிகழ்ச்சியில், ஆந்திர மாநில ஆளுநர் திருமதி. சாரதா முகர்ஜி அவர்கள் பங்கேற்றார்.



ஆளுநர் அவர்களை தேவஸ்தான செயலாட்சித் தலைவர் வரவேற்கின்றார்.

என். சி. சி. அணி வகுப்பைப் பார்வையிடுகின்றார் ஆந்திர மாநில ஆளுநர் அவர்கள்.





## வெள்ளி விழா




முன்னாள் ஆந்திரமாநில கல்வி அமைச்சர் திரு. எம். வி. கிருஷ்ணராவ், ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகத்துணை வேந்தர்பேராசிரியர்.கே. சச்சிதானந்த மூர்த்தி ஆகியோரும் இந்நிகழ்ச்சியில் பங்கேற்றனர்.



விழாவைத் துவக்கி வைத்து உரையாற்றிய ஆளுநர் அவர்கள், பத்மாவதி மகளிர் கல்லூரியின் அவசியத்தைக் குறிப்பிட்டு, மேலும் தம்முரையில் மாணவிகளுக்கு அறிவுரை கூறும் வகையில் அரசியலில் பெண்கள் தீவிரமாக பங்கேற்றல் கூடாது என்று கூறி, கல்லூரிகளில் ஆண் - பெண் இணைக்கல்வி முறையை வரவேற்றுப் பேசினுர்.





திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழகத் துணைவேந்தர் பேராசிரியர் கே. சச்சிதானந்தமூர்த்தி அவர் [illegible] வெள்ளிவிழா மலரை வெளியிடுகின்ருர்.





கூட்டத்தினரை வரவேற்றுப் பேசுகையில் தி. தி. தே. செயலாட்சித் தலைவர் அவர்கள், ராயலசீமையில் கல்வி வளர்ச்சிக்காக தேவஸ்தானம் ஆற்றி வரும் தொண்டினை விளக்கிக் கூறினர்.

கல்லூரியின் வளர்ச்சிக்குப் பலவகைகளில் துணைபுரிந்திட்ட, கல்லூரியின் முதல்வராக சுமார் 21 ஆண்டுகள் பணியாற்றிய முன்னாள் முதல்வர் டாக்டர். திருமதி ராஜேஸ்வரிமூர்த்தி அவர்களுக்கும், கல்லூரியின் பல்வேறு துறைகளைச்சார்ந்த தேர்ந்தெடுக்கப்பட்ட ஆசிரியை பெருமக்களுக்கும் ஆளுநர் அவர்கள் நினைவுக் கேடயங்கள் வழங்கினர்.

18-1-78 அன்று மாலை நடைபெற்ற கலை நிகழ்ச்சிகளில், ''பத்மாவதி ஸ்ரீநிவாசம்'' எனும் நாட்டிய நாடகம் கூட்டத்தினரைப் பெரிதும் கவர்ந்தது.







## 19-1-78 அன்று நடைபெற்ற கல்லூரியின் மகளிர் விடுதியின் வெள்ளிவிழா நிகழ்ச்சிகள்.

விழாவின் சிறப்பு விருந்தினராக பங்கேற்ற ஆந்திர மாநில தலைமை நீதிபதி திரு. எஸ். ஓபுல் ரெட்டி அவர்கள் தம்முரையில், ஒரு கல்லூரியின் விடுதி பல வகைகளில் மாணவ மாணவிகளுக்கிடையே மறைமுகமாக ஓர் சீர்திருத்த நிலையமாக செயற்படுகிறது என்று கூறினார்.

ஆந்திர மாநில அறநிலைய ஆணையர் திரு. கே. புருஷோத்தம நாயுடு அவர்கள் துவக்கி வைத்த இவ்விழாவில் தேவஸ்தான உயர் அலுவலர்களும், தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. சி. அண்ணாராவ் அவர்களும் பங்கேற்றனர்.





அன்று மாலை, கல்லூரியின் விடுதி மாணவிகளால் நடத்தப்பட்ட பல்வேறு கலை நிகழ்ச்சிகளுடன் வெள்ளி விழா இனிது முடிவுற்றது.

(18 ஆம் பக்கத் தொடர்ச்சி)

மீண்டும் வந்து இராவணனுடன் நத்துச் சண்டை செய்தான். என்றாலும், அனுமனால் இராவணனை வெல்ல முடியவில்லை. இலட்சுமணன் இராவணனை வளைத்துக் கொண்டு போர் புரிந்தான். தனக்குப் பிரமன் தந்த வேல் ஒன்றினை இலட்சுமணன்மேல் இராவணன் எறிந்தான். இதனால் மூர்ச்சையுற்ற இலட்சுமணனை அனுமன் பக்தியுடன் ஏந்திச் சென்று இராமனிடம் சேர்ப்பித்தான்.

தன்னை எதிர்த்து வரும் இராவணனை இராமபிரான் கண்டார். இராவணன் தேரின்மேல் ஏறிவருதலையும், இராமபிரான் தரைமேல் நடந்து வருதலையும் கண்ட அனுமன் இராமபிரானிடம் வந்து சேர்ந்தான்.

''ஐயனே! விரைந்து செல்லும் ஆயிரம் குதிரைகளைப் பூட்டிய தேரின் மேல் ஏறிக்கொண்டு அரக்கனாகிய இராவணன் போருக்கு வருகின்றான். தாங்களோ தரைமேல் இருந்து கொண்டே போரிட ஆயத்தமாகின்றீர். நான் வலிமையற்றவனே யானாலும், தாங்கள் என்தோள் மேல் அமர்ந்து போர் செய்தலே தக்கது என எண்ணுகின்றேன். எனவே, என் தோள்மேல் தாங்கள் எழுந்தருள்வீராக!'' என அனுமன் இராமனை வேண்டிக் கொண்டான்.

அனுமன் வேண்டுகோளுக்கு இசைந்து இராமபிரான் அவன்தோள் மேல் அமர்ந்து கொண்டார். கன்றைத் தாங்கிச் செல்லும் தாயைப் போல, அனுமன் இராமபிரானைத் தாங்கி மகிழ்ந்தான். திருமாலின் அவதாரமான இராமபிரானைத் தாங்கும்பேறு தனக்குக் கிடைக்க வில்லையே என்று கருடாழ்வான் வெட்கித் தலை குனிந்தான். ஆயிரந் தலைகளையுடைய ஆதிசேடனும் இராமபிரானைத் தாங்கி நிற்கும் அனுமனைத் தாங்கும் வலிமையில்லாது தலை நடுக்க முற்றான்.

அனுமன் வெண்ணிற வடிவினன். அனுமன்மேல் அமர்ந்துள்ள இராமனோ கருநிற வடிவினர். வெண்ணிற முடைய அனுமனைப் பாற்கடலுக்கும், கார்மேக வண்ணனாகிய கோசலராமனைத் திருமாலுக்கும் உவமை கூறலாம் எனின், இங்கு இராமபிரானே பாற்கடல் பரமன் போன்று துயில்கின்றாரிலர். எனவே, வேறொரு உவமையாலேயே இக்காட்சியைக் கம்பநாட்டாழ்வார் நமக்குக் காட்டுகின்றார்.

அனுமன் வேதத்தை யொத்தவனும். இராமபிரானோ, வேதத்தின் சாரமாகிய உபநிடதங்களில் கூறப்படும் பரம்பொருளை யொத்துள்ளாராம். எனவே, வேத முடிவில் விளங்கும் பரம்பொருள் போன்று, அனுமன்மேல் இராமபிரான் அமர்ந்துள்ளாராம்! எத்துணை அழகிய உவமை!

அனுமன் மேல் இருக்கும் இராமபிரான், இருபத்து நான்கு தத்துவமாய்த் திருமாலுக்குச் சரீரமாய் அமைந்திருக்கும் மூலப்ரகிருதிக்கு மேற்பட்ட இடத்தில் இருக்கும் பரமபதத்தை யொத்திருந்தான். அனுமனது பொன் போன்ற தோளை மேருவின் சிகரத்துக்கு ஒப்பாகக் கூறலாமோ எனின், அதுவும் பொருந்தாதாம்! ஏனெனின், மேருவின் சிகரங்கள் அப்படியும் இப்படியும் அசையும் தன்மையுடையன அல்ல. அனுமனின் பொற்றோள்களோ, இராமபிரானைத் தாங்கி அப்படியும் இப்படியும் அசைந்தாடிச் செல்லும் அழகினையுடையது. அனுமன்மேல் ஆரோகணித்து வரும் இராமனைக் கண்ட அருந்தவர் ஆசி கூறினர். வானவர் வானத்தின் கண் இருந்து மகிழ்ச்சிப் பேராரவாரம் செய்தனர்.

அனுமன்மேல் அமர்ந்தபடியே இராமபிரான் தன் வில்லாற்றலினால் அரக்கர்களையெல்லாம் அழித்தொழித்தார். வாகனமாக அமைந்த அனுமனோ, இராமபிரானது அம்பைக் காட்டிலும் விரைந்து சென்று மண்ணுலகிலும் விண்ணுலகிலும் மாறி மாறி இருப்பவனானான். இதனால் இராமபிரானுக்குப் பகைவரையழிக்கும் தொழில் எளிதாயிற்று. இராவணனைத் தவிர, மற்றெல்லா அரக்கர்களையும் இராமபாணம் கொன்று வீழ்த்திற்று. இராவணன் இவற்றை யெல்லாம் கண்டு வெருண்டான்; வில்லைக் கையில் எடுத்தான். இராவணன் மாறி மாறி எடுத்த ஆயுதங்களையும் குதிரைகளின் தலைகளையும் இராமபிரான் அறுத்து வீழ்த்தினார். இராவணனது படைக்கலங்கள், குடை, கொடி, கவசம் முதலிய பலவற்றையும் தேர்கள் பலவற்றையும் இராமனின் அம்புகள் சுட்டழித்தன. இராவணனது முடி பொடிப் பொடியாயிற்று. அனைத்தையும் இழந்த இராவணன் நாணி நின்றான்.

நாணி நின்ற இராவணனை நோக்கி இராமபிரான் பெருங்கருணையுடன், ''போர் செய்ய உனக்கு இன்னும் விருப்பமிருந்தால் இன்று போய் நாளை வா!'' என்று கூறி விடை கொடுத்தனுப்பினார்.

இராவணன்,

வாரணம் பொருத மார்பும் வரையினை எடுத்த தோளும்
நாரத முனிவற் கேற்ப நயம்பட உரைத்த நாவும்
தாரணி மவுலி பத்தும் சங்கரன் கொடுத்த வாளும்
வீரமும் களத்தே போட்டு வெறுங் கையே மீண்டு போனான்.

*(1, கும்பகருணன் வதைப்படலம்)*

நாணத்தால் நிலமகளையே நோக்கி நடந்த இராவணன் அரண்மனையை அடைந்தான். தன் தோல்வியைச் சானகி கேள்விப்பட்டால் சிரிப்பாளே என்ற நாணத்தினால் பெரிதும் வாட்டமுற்றான்.

இராவணனுக்குப் பாட்டன் மாலியவான். மாலியவான் இராவணனது வாட்டத்தைப் போக்க நல்லுரைகள் பலவற்றைப் புகன்றான். அப்போது மாயைகள் பலவற்றில் வல்லவனான மகோதரன் அங்கே வந்து சேர்ந்தான். மாலியவானின் வாயை மகோதரன் அடக்கினான். மகோதரன்

ஆலோசனைப்படிக் கும்பகருணன் வர வழைக்கப்பட்டான்.

கும்பகருணன் தன் அண்ணன் திரு வடிகளில் வீழ்ந்து வணங்கி "சானகி யைவிடுதல் வேண்டும். இன்றேல், நம் குலத்துடன் கெடுதல் வேண்டும். இரண்டில் ஒன்றைச் செய்க!" என்று அறிவுறுத்தினான். இது கேட்ட இராவணன் கும்பகருணனைச் சினந் தான். அண்ணனுக்குச் செஞ்சோற்றுக் கடன் கழிக்கக் கருதிய கும்பகருணன் போர்க் கோலம் பூண்டு போர்க்களம் அடைந்தான். கும்பகருணனைஎதிர்த்து வானர வீரர்கள் பலரும் போரிட் டனர். வாலியின் மைந்தனாகிய அங்க தனும் தோற்கலானான். தோற்கும் நிலையில் இருந்த அங்கதன் மார்பில் கும்பகருணன் தன் சூலத்தை எறியத் தொடங்கினான். இதனைக்கண்ட அனு மன் மலையொன்றைப் பெயர்த்து வந்து கும்பகருணன் நெற்றிமேல் வீசி யெறிந்தான். அனுமன் வீசியெறிந்த மலையைக் கும்பகருணன் தன் கை யினால் எடுத்து அனுமன் மேலேயே எறிந்து தன் தோள்களைத் தட்டி ஆர வாரித்தான். இதற்கிடையே அங்க தனை வானர வீரர் தூக்கிச் சென்று விட்டனர்.

கும்பகருணனுடன் தொடர்ந்து போர் புரிய அனுமன் எண்ணினான். எனவே, வேறோர் மலையைப் பெயர்த்து வந்து, "கும்பகருணனே! இதோ இந்த மலையை உன்மேல் எறியப் போகின்றேன். உனக்கு வல்லமை இருந்தால் இந்த மலையைத் தள்ளி விடு. இதனைத் தள்ளி விட்டால் உன் வல்லமையை அனைவரும் அறிவர். நானும் அதற்குமேல் உன்னோடு போர் செய்ய மாட்டேன். நீயும் மிக்க புகழைப்பெறலாம்!" என்று அனுமன் வீரவாதம் புகன்றான்.

அனுமன் உரையைக் கேட்ட கும்ப கருணன் அம்மலையை ஏற்பதாக வீரம் பேசினான். அனுமன் அம்மலையினைக் கும்பகருணன்மேல் வீசினான். கும்ப கருணனின் தோள்மேல்பட்ட மலை யானது பொடிப் பொடியாயிற்று. கும்பகருணனின் தோள் வலியைக் கண்ட அனுமனும் அப்பாற் சென்றான்.

பின்னர், கும்பகருணன் வானரக் கூட்டமே இல்லாதவாறு அனைத்தை யும் கொன்று குவித்தான். வானரங் கள் அழிந்த நிலைமை கண்டு இலக்கு மணன் கும்பகருணனுடன் போர்புரிய அவ்விடம் சார்ந்தான். தேரோட்டிக் கொண்டு வரும் கும்பகருணன் முன்னே இலக்குமணன் தரைமீது நின்று கொண்டிருக்கும் நிலையினை அனுமன் கண்டான். தன் தோள்மேல் ஏறிக்கொள்ளுமாறு அனுமன் இலக்கு வனை வேண்டிக் கொண்டான். இலக்கு வனும் அனுமன் தோள்மேல் ஏறிக் கொண்டான். வெள்ளி மயமான கைலாய மலைமேல் பொன் மயமான மேருமலை விளங்குதலைப்போல, அனு மன்மேல் வீற்றிருந்த இலக்குமணன் காட்சியளித்தான்.

அனுமன்மேல் இருந்தவாறே இலக்குமணன் கும்பகருணனுடன் கடும்போர் செய்தான். இதனால் அரக் கர் பலர் மாய்ந்தனர். இலக்குமணன் விட்ட அம்புகள் கும்பகருணனது படைக்கலங்களையும், குண்டலங்கள், முடிகள், ஆரங்கள், மணிச்சரங்கள், தண்டைகள், தோள்வளைகள், கடகங் கள் முதலான பலவற்றையும் துண்ட மாகச் செய்தன.

எனவே, கும்பகருணன் இலக்கு மணனுடன் பொருதலை விட்டுச் சுக்ரீவன் இருக்கும் திசைநோக்கிச் சென்று சுக்ரீவனுடன் போர் செய்ய லானான். சுக்ரீவன் பெரிய மலையொன் றைப் பெயர்த்து வந்து கும்பகருணன் மேல் வீசினான். கும்பகருணன் அம் மலையைத் தன் கையினால் பிசைந்து தூளாக்கிக் காற்றில் பறக்க விட்டு விட்டான். இச்சமயத்தில் கும்ப கருணன் தவறுதலில்லாத சூலம் ஒன்றைச் சுக்ரீவன் மேல் வீசியெறிந் தான். அந்தச் சூலம் வரும் வேகத் தைக் கண்ட பலரும் சுக்ரீவன் இறந் தொழிந்தான் என்றே கதறலாயினர். அப்போது ஓர் அதிசயம் நிகழ்ந்தது.

தருமத்தைப் பாதுகாப்பதற் கென்றே வந்துள்ள அனுமன் அச் சூலத்தைக் கண்டு விட்டான். அச் சூலத்தைத் தாவிப் பிடித்து. இரண் டாக முறித்துத் தரைமேல் போட்டு விட்டான். அனுமன் அச்சூலத்தை முறிக்கும்போது ஏற்பட்ட ஓசை, இராமபிரான் மிதிலா புரியில் சிவ தனுசை முறித்தபோது ஏற்பட்ட ஓசையை ஒத்திருந்தது.

அரக்கர் குலத்தவனான கும்ப கருணன் அனுமனின் ஆற்றலை அப் போதுதான் உண்மையாகவே உணர்ந் தான். எனவே, அனுமனைப் பகைவனா கிய கும்பகருணன் மனமாரப் புகழ்ந் தான்.

"வீரனே! உன் கை வலிமையை மனத்தினாலும் எண்ண முடியாது. வாயினாலும் புகழ்ந்து கூற முடியாது. அருஞ்செயல்களை முடிப்பதில் உனக்கு நிகர் நீயே! எந்நாட்டிலும் உன்னைப் போன்ற வீரன் ஒருவனைக் காணுதல் அரிதேயாகும். உன் வலிமைக்கு உவ மையாகக் கூறுதற்கு இப்பூவுலகில் யாது உளது?" என்று பகைவனாகிய கும்பகருணனே அனுமனைப் புகழ்ந்து கூறினான்.

(தொடரும்)

## அறிவிப்பு

**ஸப்தகிரியில் வெளியிடப்படும் கட்டுரைகள் புகைப்படங் கள் ஆகியவற்றிற்கு எந்தவிதமான சன்மானமும் வழங்கப் பட மாட்டாது.**

**—தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.**

தொடர் கட்டுரை

# கீதை காட்டும் நல்வழி



அத்தியாயம் – 9

பகுதி — 6

## ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

தாயின் கருப்பத்தில் சிசு இருக்கிறது. அந்நிலையில் அது தாய்க்கு அன்னியமானதல்ல. அதன் போஷணை முழுவதும் தாயிடமிருந்தே வருகிறது. கருப்பையிலிருந்து வெளி வந்த பின்னரும் கூட அது தாயையே சார்ந்திருக்குமளவு அவள் அதற்கு உணவு அளித்துப் பராமரிக்கிறாள். அனன்ய பக்தியில் ஈடுபட்டுள்ள பக்தர்கள் அடையும் பேறு இதைக் காட்டிலும் பன்மடங்கு பெரிது. விநாடி கூடக் கண்ணிமைக்காது அவர்களைக் காப்பது பகவானின் தலையாய கடமையாகிறது. தாய்ப் பறவை உணவைத் தேடிக் கொணர்ந்து தன் குஞ்சுகளுக்கு வாயில் ஊட்டுவதைப் போல, குழந்தையின் பசி நேரம் உணர்ந்து தாய் அதற்குப் பாலைப் புகட்டுவதைப் போல பக்தனின் தேவைகளை உணர்ந்து பகவானும் அவற்றை அவ்வப்பொழுது பூர்த்தி செய்கிறான்.

அனைத்திலும் உயர்ந்த பரம்பொருளை வழிபடுதல் அனைவருக்கும் சாத்தியமல்ல என்று முன்பே கூறப்பட்டது. ஏனெனில் அவரவர் மனபரிபாகத்திற்கு ஏற்பவும், குணத்திற்கு ஏற்றபடியும் தான் பக்தி முறையும் அமைகிறது. மற்ற தேவதைகளை வழிபடுபவர்களும் பக்தர்கள் தான். அவர்களிடத்தும் சிரத்தை இருக்கலாம். நாம் வழிபடும் தெய்வம் நமக்கு நிச்சயம் துணை புரியும் என்ற நம்பிக்கை இருக்கலாம். அவர்களது பக்தி என்னவாகிறது என்ற கேள்விக்குப் பகவான் விடை தருகிறார்:

யே அப்யன்ய தேவதா பக்தா
  யஜந்தே சிரத்தயான் விதா: |
தே அபி மாமேவ கௌந்தேய
  யஜந்த்யவிதி பூர்வகம் || 23 ||

'சிரத்தையோடு கூடிய பக்தர்கள் மற்ற தேவதைகளை வணங்குங்கால் விதி வழுவியவர்களாக என்னையே வணங்குகின்றார்கள்.'

இந்த இடத்தில் சிரத்தை என்பதற்கு தெய்வத்திடம் நம்பிக்கை கொண்டு விளங்குதல் என்றும் அர்த்தம் கொள்ளலாம். இத்தகைய பிற தேவதைகளை வணங்குகின்றவர்கள் விதி வழுவிச் செய்கின்ற செயல் 'அவிதி பூர்வகம்' எனப்படுகிறது. அதற்குக் காரணம் அவர்களிடமுள்ள அறியாமையேயாகும். அத்தகையவர்களும் என்னையே தான் வணங்குகின்றனர். உண்மையில் அவர்களுக்கு அருளைத் தருபவன் நானாக இருக்க, தாங்கள் வழிபடும் சிறு தேவதைகளால் தான் தங்களுக்கு நலம் வந்து வாய்க்கிறது என்று அவர்கள் நினைப்பார்களே யாகில் அது அறியாமையாகிறது.

வானத்தில் சூரியன் பிரகாசித்துக் கொண்டிருக்கிறான். கீழே பூமியில் தரையின் மீது கொஞ்சம் பஞ்சு கிடக்கிறது. ஒரு சிறுவன் தன் கையிலிருக்கும் லென்ஸைப் பஞ்சிற்கு நேராக மேலே பிடிக்கிறான். அதனால் பஞ்சு எரிகிறது. பஞ்சு ஏன் எரிகிறது? சூரியனின் கிரணங்கள் லென்ஸின் மூலம் குவிந்து பஞ்சின்மீது படுவதால். உண்மையில் பஞ்சை எரித்தது சூரிய கிரணங்களே, லென்ஸ் அல்ல. லென்ஸ் தான் பஞ்சை எரித்தது என அந்தச் சிறுவன் கருதினால் அது அறியாமை.

---

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

---

அதுபோல யார் யார் எந்த தேவதையை வழிபட்டாலும், அவர்களது பிரார்த்தனை யாவும் ஒரே இறைவனையே சென்றடைகிறது. அவர்கள் தாங்கள் பக்தியின்மூலம் பெறுவதனைத்தும் அந்த ஒரே பரமனிடமிருந்து தான் வருகின்றது.

சிறு தேவதை வழிபாட்டைப் பகவான் முறைதவறிய வழிபாடு என்று சொல்கிறார். ஏனெனில்;

அஹம் ஹி ஸர்வயக்ஞானாம்
  போக்தா ச பிரபுரேவ ச |
ந து மாமபிஜானந்தி
  தத்த்வேனாதஸ்ச் யவந்தி தே ||24||

''நானே ஸகல யக்ஞங்களுக்கும் போக்தாவாகவும் பிரபுவாகவும் இருக்

தொடர் கவிதை :

# திருவேங்கடவர் பொன்னூசல்

செஞ்சொற்கவி. T. S. ராஜகோபாலன்

## பிரளயத்தில் நம்மைக் காத்தமை

வானளவும் வளர்புனலில் தளிரின் பாலோர்
மழவுருவிற் படிந்துலகம் வயிற்று ளுய்த்து
மானவர்க ளுய்வதுவே மனத்து ளூற
வரையறியாப் பரிவேற்கு மண்ணூல்! முற்ற
ஊனணவுங் கண்ணுலே உலக ரெல்லாங்
கண்டேத்தும் வேங்கடத்தி னுச்சி யின்பால்
தேனணவு துளவத்தின் வளையஞ் சேருந்
திருமுடியீர்! திருமார்வர்! ஆடி ரூசல்.

## உலகைப் படைத்து நமக்கே யானமை

அகடுற்ற வுயிர்தம்மை யுமிழ்ந்து நாலா
ஆக்கையுளே யுய்த்தவற்றி னுள்ளே புக்குத்
திகழுற்ற நெறியோடு நலன்க ளோதித்
தெருளூட்டுந் தேவசிகா மணியே! கைம்மா
இகலுற்றுப் பளிங்குதமிற் பாய்ந்து கோட்டின்
முத்துதிர்க்கும் வேங்கடத்தி னுச்சி யின்பால்
புகருற்ற மணிமகரக் குழை யிரண்டும்
புறமசையத் திருமார்வர்! ஆடி ரூசல்.

## முதலாழ்வார்களது மங்களாசாஸநம்

கோவலிடை கழிதன்னுள் நும்மைக் கண்டு
கவிபாடுங் கோவிதர்கள் மூவ ரோங்கும்
ஆவலுட னருகமர்ந்து விசயம் பாடி
ஆடகத்த பலகைதனைப் பற்றி யாட்ட
நாவலரும் வேடுவரும் விலங்கு தாமும்
நாடுமுயர் வேங்கடத்தி னுச்சி யின்பால்
மூவருளும் முதலாகி நிற்குங்கோவே!
முத்துநிரைத் திருமார்வர்! ஆடி ரூசல்.

## திருமழிசைப் பிரானது மங்களா சாஸநம்

மகிசார புரந்தன்னுள் வந்து தோன்றி
மதமெல்லா மாய்ந்துயர்ந்த முனிவன் நும்பால்
மிகுமாத ரந்தன்னில் விதிசி வர்க்கும்
முதலாகி யுயிராவீ ரென்று பாடப்
புகுமாத ரந்தன்னில் தேவர் மண்ணோர்
போற்றுஞ்சீர் வேங்கடத்தி னுச்சி யின்பால்
மிகுமோதங் காவிகொண்மூ காட்டும் வண்ண
மேனியுடைத் திருமார்வர்! ஆடி ரூசல்.

## நம்மாழ்வாரது மங்களா சாஸநம்

வேதத்தைச் செந்தமிழால் விரித்த மாறன்
தொண்டதுவே மிகவிரும்பி நுந்தம் பொன்னும்
பாதத்தைக் கண்ணாரக் கண்டு வாழ்த்தப்
பத்தரினம் மறைபாடி மருங்கு சூழ்ந்து
மீதக்க வுபசாரம் பத்தி ஞறும்
ஆற்றுஞ்சீர் வேங்கடத்தி னுச்சி யின்பால்
கோதற்ற பொன்னுடை யரையில் தாங்குங்
குருமணியே! திருமார்வர்! ஆடி ரூசல்.

கிறேன். ஆனால் பல தேவதைகளை வணங்குபவர்கள் என்னை உள்ளபடி அறிகிறார்களில்லை. ஆகையால் அவர்கள் வழுவிப் பிறக்கின்றனர்.''

கோவிலுக்குச் செல்லுபவர் அனைவரும் பக்தராய் விட முடியாது. ஏனெனில் கோவிலுக்குச் செல்லுதல் என்பது வெறும் ஒரு சடங்குதான். மனத்தில் உண்மையான பக்தி உள்ளவரே பக்தராவர். அதுபோலப் பல தேவதை வழிபாட்டில் ஈடுபடுபவர்கள் அனன்ய பக்தர்களாக ஆக முடியாது. அக்னி, இந்திரன், சூரியன், சந்திரன் போன்ற பல்வேறு தெய்வங்களை வழிபடுபவர்கள் அடிப்படையில் அனைத்தும் அவனே என்ற உண்மையை உணராது இருப்பதால் அது விதி வழுவிய வழிபாடு ஆகிறது.

ஒரு சிறு விதையைப் பூமியில் நடுகிறோம். அது பெரிய மரமாக வளர்கிறது. மரத்தில் அநேக கிளைகள், இலைகள் எல்லாம் காணப்படுகின்றன. எத்தனை கிளைகள் மரத்தில் இருந்தாலும், அத்தனைக்கும் சத்தை அனுப்பும் வேலையை வேர் தான் செய்கிறது. எனவே நாம் நீரை வேரில் தான் ஊற்றுவோமே ஒழிய மரத்தின் கிளைகளில் ஊற்ற மாட்டோம். அதுபோல எத்தனை தேவதைகள் இருந்தாலும் அனைத்திற்கும் அடிப்படையாக உள்ள பரம்பொருள் ஒன்றே என்பதை அறியாதவரை உண்மை ஞானம் மலர வழியில்லை.

புலன்கள் பத்தாக இருக்கலாம். ஞானேந்திரியங்கள் ஐந்து. கர்மேந்திரியங்கள் ஐந்து. இந்தப் பத்து புலன்களும் காணப்படுவது ஒரு உடலில் தான். இந்தப் பத்து புலன்களாலும் பெறப்படும் அறிவானது ஒரே உணர்வையே சென்றடைகின்றன. அதுபோல எதைச் செய்தாலும் அனைத்தும் அவனையே சென்றடைகின்றன என்பதை அறியாது செய்யப்படும் பக்தி விதி வழுவிய பக்தியாகும். இத்தகையவர்கள் சிறு தேவதை வழிபாட்டால் பெற்ற தாற்காலிக இன்பங்களைச் சில காலம் பெற்றிருந்து பின்

னர் மீண்டும் பூமியில் பிறவி யெடுக்கின்றனர். அரசனிடமிருந்து பெற்ற நன்மை நிரந்தரமாக இருக்கும். ஆனால் சிறு உத்தியோகஸ்தனிடமிருந்து பெற்ற பலனோ தாற்காலிகமாக இருந்து பின்னர் மறைந்து விடும். அதுபோல அனைத்திலும் மேலான பரம்பொருளை வழிபடுவர் மேலான நிலையை அடைகின்றனர். மற்று சில்லரை தேவதைகளை வழிபடுபவர் தோன்றி மறையும் இன்பத்தைப் பெற்ற அதை விரைவிலேயே இழந்து விடுகின்றனர்.

அவரவர் வழிபாட்டிற்கேற்ப அவரவர் சென்று அடையும் நிலையும் அமைகிறது.

யாந்தி தேவ விரதா தேவான்
பித்ரு ந்யாந்தி பித்ருவ்ரதா: |
பூதானி யாந்தி பூதேஜ்யா:
யாந்தி மத்யாஜினோபி மாம் || 25 ||

''தேவர்களைத் தொழுபவர் தேவர்களை அடைகின்றனர். பித்ருக்களைப் போற்றுபவர் பிதிருக்களை அடைகின்றனர். பூதங்களை வணங்குபவர் பூதங்களைப் போய்ச் சேருகின்றனர். என்னைப் பூஜிக்கிறவர்கள் என்னை வந்தடைகின்றனர்.''

மனப் பூர்வமாக எந்தெந்த வழிபடு தெய்வங்களை மக்கள் வணங்குகின்றனரோ அவற்றைத் தான் மரண காலத்தில் சென்றடைகின்றனர். மனத்தின் பண்பாட்டிற்கேற்ப வழிபடு தெய்வங்களின் தரமும் அமைகிறது. காட்டில் வாழும் காட்டு வாசிகள் காடன், மாடன் என்ற காட்டுத் தெய்வங்களை வழிபடுவதைக் காணலாம். நகரத்தில் வாழ்பவர்களுக்கிடையிலும் பலர் ஆயிர மாயிரம் சில்லரைத் தேவதை வழிபாட்டில் ஈடுபடுகின்றனர். அவர்கள் ஏன் அவ்விதம் செய்கின்றனர் என்றால் அது அவரவர் மன பரிபாகத்தைப் பொறுத்தது.

தன்னைக் காட்டிலும் மேல் நிலையிலுள்ளவரை அணுகி அவர்களைப் போலத் தாங்களும் ஆக வேண்டுமென்று விரும்புவதே பொதுவாக மக்களது இயல்பு. வழிபாட்டின் அடிப்படைத் தத்துவமும் அதுவே. மனது எதை இடைவிடாது எண்ணுகிறதோ அதன் மயமாக ஆகிறது. சீரியதைச் சிந்திக்கின்ற மனது சீரியதாகிறது. தாழ்ந்ததைச் சிந்திக்கும் மனது தாழ்வடைகிறது. இந்த அடிப்படையில் தான் தேவதைகளை உபாசிப்பவன் தேவதைகளை அடைகிறான். பித்ருக்களை வணங்குபவன் பித்ருக்களையும், பூத வழிபாடு செய்பவன் பூதங்களையும், பரமாத்மனை வழிபடுபவர் பரமாத்மனையும் அடைகின்றனர்.

இந்த இடத்தில் ஒரு ஐயம் நமது மனத்தில் எழக்கூடும். சிறு உத்தியோகஸ்தர் முன்னிலையில் யார் வேண்டுமானாலும் எளிதில் செல்ல முடியும். ஆனால் அரசன் முன்னிலைக்குச் செல்வது எல்லோருக்கும் சாத்தியமாகாது. அதுபோல சிறு தேவதை வழிபாடு பண்ணுவது எல்லோருக்கும் சாத்தியம். ஆனால் பரம்பொருளை வழிபடுவது அவ்வளவு எளிதல்லவே. சிறு தேவதைகளைத் தம் வசப்படுத்துதல் எளிது ஆனால் சர்வேச்வரனைத் திருப்திப் படுத்துதல் எளிதல்ல என்ற வாதத்தைக் கிளப்புவோருக்கு பகவான் பதில் அளிக்கிறார்.

பத்ரம புஷ்பம் பலம் தோயம்
யோ மே பக்த்யா ப்ரயச்சதி |
ததஹம் பகத்யுபஹ்ருதம்
அச்நாமி ப்ரயதாத்மன: || 26 ||

''யார் எனக்கு இலை, மலர், கனி அல்லது நீரை பக்தியுடன் படைக்கிறானோ, அந்தத் தூய மனத்தவனது அன்பளிப்பை நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறேன்.''

பொன்னையும் பொருளையும் கண்டு மயங்குவது உலகத்தவர் இயல்பு. மக்களில் எத்தகைய மனத்தினரையும் பொன்னையும், பொருளையும் காட்டி தன் வயப்படுத்தி விடலாம். ஆனால் இறைவனைத் திருப்திப் படுத்துவதற்கு இதெல்லாம் தேவையில்லை. ஏன்? அவன்தானே அனைத்திலுடையவும் உற்பத்தி ஸ்தானம். பின் அவனைத் திருப்திப்படுத்துதல் எங்ஙனம்? நம்மிடம் தூய பக்தி, அன்பு ஒன்று மட்டும் இருந்தால் போதும். நாம் அவனுக்கு என்ன கொடுக்கிறோம் என்

பது முக்கியமல்ல. எப்படிக் கொடுக்கிறோம் என்பதுதான் முக்கியம். குடம் குடமாகப் பாலும், தேனும், நெய்யும் கொட்டி அபிஷேகம் செய்தாலும் மனத்தில் தூய பக்தியின்றேல் இறைவன் நம்மை ஏறெடுத்தும் பார்க்க மாட்டான். மாறாக இறைவனைத் தவிர வேறெதையும் கனவிலும் கருதாத அனன்ய பக்தியுடன் கூடியவனாக ஒருவன் ஒரு இலையையோ, புஷ்பத்தையோ, கனியையோ அல்லது வெறும் நீரையோ கொடுத்தாலும் போதும்; பக்தியுடன் அளிக்கப்படும் அந்த நீர் அல்லது இலை விலை மதிப்பற்ற காணிக்கையாகிறது. எதற்கும் சிக்காத இறைவன் தூய மனமுடையவர்களது பக்தி வலையில் மட்டும் சிக்குகின்றான்.

இத்தகைய மேன்மையை நாம் மகான்களிடத்தும் காணலாம். ரிஷிகேசம் சிவானந்தாசிரமத்தில் குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்தரைக் காண்பதற்காக உலகெங்கிருந்தும் பக்தர்கள் ஆசிரமத்திற்கு வந்த வண்ணமிருப்பர். பக்தர்களில் பலவகை உண்டு. மனத்தினில் பக்தி இல்லாவிடினும் குருவிற்கு முன்னால் தாங்கள் பக்தியோடிருப்பவர்கள் போலக் காட்டிக் கொள்ள விரும்பும் ஒரு வகை, மனத்தில் உள்ள பக்தியை நான்கு பேர் பார்த்துப் பாராட்ட வேண்டும் என்பதற்காக குருவின் முன்னர் முண்டியடித்து முன் வரிசையில் அமர விரும்பும் இன்னொரு வகை, மனத்தின் கண் தூய பக்தியிருப்பினும், குருவின் முன்னால் அதை வெளிக்குக் காட்ட வெட்கப்படும் பிறிதொரு வகை என்று இவ்வாறாக பக்தர்களில் பலவகை உண்டு. மகான்கள் உலகையும் உலகோரையும் பார்ப்பது அவர்களது வெறும் ஊனக் கண்களால் அல்ல, மற்று ஞானக் கண்ணால். பொருள்களை எக்ஸ்ரே படம் பிடிப்பது போன்று நமது மனத்தினை அவர்கள் தங்களது ஞானக்கண்ணால் படம் பிடித்துவிடுவர். மகான்களை நமது புறச் செயல்களால் ஏமாற்ற முடியாது.

எத்தனையோ பக்தர்கள் கூட்டத்தில் முதல் வரிசையில் அமர்ந்து கொள்ளப் போட்டி போடும் வேளையில் குரு தேவரது தரிசனம் ஒன்றே போதும் என்று சில பக்தர்கள் அறையின் ஒரு மூலையில் அமர்ந்து அவரது காட்சியில் மெய் மறந்திருப்பர். குரு தேவர் அவர்களது உண்மை பக்தியை உணர்ந்தவராக தன்னருகில் இருக்கும் அனைவரையும் விடுத்து, எட்ட அமர்ந்திருக்கும் பக்தரைப் பெயர் சொல்லி அவரது மொழியிலேயே தன் அருகில் அழைத்து அவருக்குப் பிரஸாதம் கொடுத்து தன்னுடன் போட்டோ படமும் எடுத்துக் கொள்ளச் செய்வார்.

சபரி உலர்ந்த இலந்தைப் பழத்தைத்தான் ராமனுக்குக் கொடுத்தார். விதுரர் பழத் தோலைத் தான் பரமனுக்குக் கொடுத்தார். குசேலரோ காய்ந்து போன அவலைக் கண்ணனுக்கு அளித்தார். கண்ணப்பரோ வெனில் தனது எச்சிலையே அபிஷேக நீராக்கி, தான் மென்ற மாமிசத்தை அமுதாகப் படைத்தார். அத்தனையையும் இறைவன் அன்புடன் ஏற்று அவர்களை ஆட்கொண்டார். பகவான் வேண்டுவது பக்தி ஒன்றைத் தான்.

தூய பக்தி ஒன்றினால் தான் பகவானைத் திருப்திப் படுத்த முடியும் என்பதால் நாம் நமது அன்றாட வாழ்வை எப்படி அமைத்துக் கொள்ள வேண்டும்?

> யத் கரோஷி யதச்னாஸி
> யஜ்ஜுஹோஷி ததாஸி யத் ।
> யத் தபஸ்யஸி கௌந்தேய
> தத் குருஷ்வ மதர்ப்பணம் ‖ 27 ‖

'கௌந்தேய! நீ எதைச் செய்தாலும், எதைப் புசித்தாலும், எதை ஹோமம் பண்ணினாலும், எதைத் தானம் செய்தாலும், எந்தத் தவத்தைப் புரிந்தாலும், அதை எனக்கு அர்ப்பணமாகச் செய்துவிடு.'

வாழ்வில் நிம்மதியையும் அமைதியையும் அடைவதற்கான வழி இந்த சுலோகத்தில் கூறப்படுகிறது. நாம் செய்யும் அனைத்துச் செயல்களையும் இறைவனுக்கு அர்ப்பணம் பண்ணத் தெரிந்து கொள்வோமேயாகில், அதுவே சிறந்த ஈசுவர ஆராதனையாகிறது. 'நான் செய்கிறேன்' என்ற ஆணவம் நம்மிடம் இருக்கும் வரை நாம் செய்யும் செயல்களின் விளைவுகளுக்கு நாம் உட்பட்டாக வேண்டியிருக்கிறது. மாறாக, அனைத்தும் அவனுக்கு அர்ப்பணம் என்ற பாங்கில் செயல் செய்கையில் செயல்களின் விளைவுகள் நம்மைச் சிறிதும் பாதிக்க மாட்டா.

உதாரணமாக உணவில் அனைவருக்கும் பற்று உண்டு. விதவிதமான பண்டங்களை உண்டு வயிறை நிரப்புவது போகி ஒருவனின் செயல் ஆகிறது. தேவைக்கு ஏற்ப உண்டு பழகுவது சாதனையாகிறது. உண்பதையே கடவுள் ஆராதனையாகச் செய்கையில் போகம் யோகமாக மாறி விடுகிறது.

தானம் கொடுக்கையில், ''நாம் பெரிய பணக்காரர். பலருக்கு வாழ்வளிக்கிறோம். நம்மை நம்பியே பலரும் இருக்கின்றனர்,'' என்ற எண்ணம் நம்மிடம் எழுமேயாகில் அந்தத் தானம் கீழ்த்தரமானதாகிறது. ஆனால் அதை ஈசுவரார்ப்பணமாகச் செய்வது சிறந்த தானமாகிறது.

எந்தக் காரியம் செய்தாலும் அதில் பணிவும், பக்தியும் கலந்திருக்குமாகில் அது இறைவனுக்கு உகந்த பூஜையாகிறது. வேக வைத்த தானியம் திரும்ப முளையாது போவது போன்று, 'யான்' 'எனது' அற்ற செயல்கள் ஒருவனைப் பந்த படுத்த மாட்டா.

இந்த இடத்தில் ஒரு சந்தேகம் எழலாம். எல்லாவற்றையும் அவனுக்கு அர்ப்பணம் செய்தல் சிறந்த யோகம் ஆகிறது என்று சொல்கின்ற இடத்து, தீய காரியங்களையும் ஒரு கயவன் ஆண்டவனுக்கு அர்ப்பணித்தால் அதை ஆண்டவன் ஏற்றுக் கொள்வானா என்பதுதான் அது. போக்கிரிக் குழந்தை தன் தாயை அடிக்கையில் அதனால் அந்தத் தாய் அதைத் தன் குழந்தை இல்லை என்று ஒதுக்கி விடுவாளோ! மாட்டாள் அல்லவா? அது போல கயவனையும் இறைவன் தன் அருளால் காலக் கிரமத்தில் நல்லவனாக மாற்றி அருளுகிறார். எனவே எதைச் செய்தாலும் அதைக் கடவுள் பொருட்டுச் செய்பவருக்குத் தீவினை விரைவில் அகன்றுவிடும். காட்டில் கொடிய வேடனாகத் திரிந்த ரத்னாகரன் வால்மீகியானது இவ்விதம் தானே!

அனைத்தையும் ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்வதால் ஏற்படும் பலன் யாது? இந்தக் கேள்விக்கு விடையை பகவான் அடுத்த சுலோகத்தில் அளிக்கிறார். (தொடரும்)

# திருமலையில் ஸ்ரீ தியாகராஜர்

சீரும் சிறப்பும் உடையதும், தேவர் மூவர் வழிபடும் திவ்ய க்ஷேத்திரமு மாகிய திருமலையில்,

'' கூனேறு சங்கமிடத்தான் தன்
வேங்கடத்துக்
கோனேரி வாழும் குருகாய்ப்
பிறப்பேனே!
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச்
சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையவனா
வேனே! ''

என்று அனலில் இட்ட மெழுகாய் உருகிப்பாடும் 'குலசேகராழ்வாரின்' உள்ளக்கிடக்கை என்னவென்று இயம்ப முடியும். திருமலை என்றாலே பூலோக வைகுண்டம் என்பது வெள்ளிடை மலையாகும். அத்தகைய பெருமைமிக்க திருவேங்கடவன் ஸந்நிதியில் ஸேவை செய்த மகானுபாவர்களின் எண்ணிக்கை கணக்கிலடங்காது எனலாம். திருமலையில் தங்கிஉள்ளம் உருகி அனவரதமும் பல்லாயிரக் கணக்கான பாக்களைப்பாடி பரவசம் அடைந்த பாவேந்தன் அன்னமாச்சார்யாவின் பாக்கியமே பாக்கியம். அத்தகையமகானுபாவர்கள், பக்தசிரேஷ்டர்களின் வரிசையில் திருமலைக்கு யாத்திரையாக வந்தவர்தான் நாதயோகி - நாதபிரம்மம் - ஸங்கீத மேதை ஸத்குரு ஸ்ரீ தியாக பிரம்மம் ஆவார். பரமன் பக்தர்களை சோதிப்பதும், விளையாடுவதும், அதனால் அவர்களது மன இயல்பை பாக்கள் மூலம் வெளியிடச் செய்வதும், அதில் களிப்படைவதும் பரந்தாமனுக்கு கைவந்த கலையாகும். அத்தகைய லீலையை மகா தவ சிரேஷ்டரான பாகவத சிரோன்மணி ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளிடமும செய்து அதன் பலனாக தியாகய்யர் வாக்கினால் இரு கிருதிகளை புனையச் செய்து பரமன் மகிழ்ந்த வைபவம்தான் இந்த கட்டுரையில் விவரிக்கப்பட்டுள்ளது.

திருவையாறு க்ஷேத்திரத்தில் வாசம் செய்து ஸ்ரீ ராமச்சந்திரன் மீது அநேக கிருதிகளைப் பாடி வந்த பாகவதோத்தமரான ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகளைப் பார்த்து அவ்வூரில் உள்ள சில பிராம்மணர்கள் 'இந்தத்தியாகராஜன் வேதம் - ஆகமம் - ஸாஸ்திரம் - நியமம் முதலியன இல்லாமல் ஸதா 'ராமா' 'ராமா' என்று பாடுகிறான். தீர்த்த யாத்திரை முதலானது செய்ததுண்டா' என்று ஏளனமாகப் பேசவும், இதனைக் கேள்வியுற்ற தியாகய்யா,



'' கோடி நதுலு தனுஷ்கோடிலோ
னுண்டக
ஏடிகி திரிகெதவே! ஓ மனஸா ''

என்று 'தோடி' ராகத்தில் கீர்த்தனையாக பதில் கூறிவிட்டார். அதாவது கோடி நதிகள் என்னுடைய ராமனின் கோதண்டம் எனப்படும் தனுசின் கோடியில்-அதாவது வில்லின் வளைந்த மேல் பாகத்தில் இருக்க, தனுஷ்கோடிக்கு தீர்த்த யாத்திரை தேவையில்லை என்று கூறி விடுகிறார். (இங்கு ஸ்வாமிகள் 'தனுஷ்கோடி' எனும் பதத்தினை கையாண்டு இருக்கும் நயத்தை கவனிக்கவும்) பின்னர் ஸ்ரீ ராமபிரானின் அன்புக் கட்டளைக்கு இணங்கித் தீர்த்தயாத்திரையாகவந்தவர்தான் ஸ்ரீ தியாகபிரம்மம். அவர் திருவேங்கடவனின் திவ்ய தரிசனம் காண வந்தநேரத்தில் மூலவர் முன்னால் திரை போடப்பட்டுவிட்டது. மீண்டும் திரை விலக்கப்படமாட்டாது எனவும் கூறிவிட்டனர். தியாகய்யர் என்னசெய்வார்? செய்வதறியாமல் மனம் வருந்தி கண்களில் நீர் வழிய நின்றுவிட்டார்.


திரு. P. K. சுந்தரராஜன், B. A.,
சேலம் டவுன் - 1.


அதுசமயம் அவர் நெஞ்சுருகி ஓர் கீர்த்தனை பாடுகிறார். அது 'கௌளிபந்து' ராகத்தில் அமைந்ததாகிறது.

பல்லவி

'' தெரதீயகராதா நாலோநி
திருப்பதி வெங்கடரமணா
மதமத்ஸரமனு ''

பொருள்: திருப்பதி வேங்கடரமணா! (உன் ஸந்நிதியில் திரை இருப்பது நியாயம்தான். ஏனென்றால்) என்னுடைய மனதில் மதம்-மாச்சர்யம் எனும் பொறாமைத்திரை அகலவில்லையே! அதனை விலக்கலாகாதா!

அநுபல்லவி

'' பரம புருஷ தர்மாதி மோக்ஷமுல
பாரதோலு சுந்நதி நாலோனி ''

பொருள்: பரம புருஷனே! என்னிடம் தீயதான மதம் மாச்சர்யம் முதலான குணங்கள் இருப்பதைக் கண்டு தர்மம் - அர்த்தம் - மோக்ஷம் முதலான நல்லவைகள் என்னை விட்டு பறந்தோடும்படி செய்கின்றனவே!

சரணம்

''வாகுரமனிதெலியக ம்ருககணமுலு
வச்சி தகுலு ரீதியுன்னதி
வேகமே நீ மதமு நநுஸகிஞ்சின
த்யாகராஜனுத மத மத்ஸரமனு '

பொருள் : வலை விரிக்கப்பட்டுள்ளது என்று தெரியாமல் மிருக ஜாதிகள் தானுக வந்து வலையில் சிக்கிக்கொள்வது போன்று காம, க்ரோத, லோப, மோக, மத, மாச்சர்யம் எனும் வலையில் நான் மாட்டிக் கொண்டு இருக்கிறேன். ஆகையால் விரைவாக இந்தத் தியாகராஜனை உன் கருணையால் காத்து மோக வலையிலிருந்து விடுவிக்கலாகாதா!

என்று கண்களில் நீர் வழிய மனம் உருகிப் பாடியதும் திரை பட்டென்று அறுந்து விடுகிறது. விண்ணோர், மண்ணோர் போற்றும்படியான தயாபரனுகிய ஸ்ரீ வேங்கடநாதனைக் கண்குளிர தரிசனம் செய்து ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் பரவசம் அடைகிறார்.

அந்த பிரம்மானந்தமான பரவசத்தின் காரணமாக 'மத்யமாவதி' ராகத்தில் ஓர் அழகான கீர்த்தனை உடனே அருவிபோல் தேனுகப் பாய்கிறது.

### பல்லவி

'' வெங்கடேசா நிநு ஸேவிம்பநு பதி
வேல கநுல காவலெநய்ய ''

பொருள் ; திருவேங்கடநாதனே! உன்னை ஸேவிக்க - திவ்ய ரூபத்தினைக் காண பதினுயிரம் கண்கள் வேண்டும் ஐயனே!

### அனுபல்லவி

'' பங்கஜாக்ஷ பரிபாலித முநிஜந
பாவுக மகு திவ்ய ரூப முநு கொந்ந ''

பொருள் : தாமரைக் கண்ணனே! முனிவர்களைக் காத்து ரக்ஷிப்பவனே! நன்ருக உன்னுடையதிவ்வியமான ரூபத்தினை விவரமாகக் காண பதினுயிரம்கண்கள் வேண்டும்

### சரணம்

'' யோகி ஹ்ருதய நீவே கதியநு ஜந
பாகதேய வர யோகீச சயந
பாகவதப்ரிய த்யாகராஜநுத
நாகாசலமு பை பாகுக நெலகொந்ந''

பொருள் : யோகிகளது உள்ளத்தில் உறைபவனே! நீயே கதியென்றுஉன்னைச்சரணடையும் மக்களின் பேரதிர்ஷ்டமே! கற்பகத்தருபோன்றவனே! ஆதிசேஷன் மீது துயில்பவனே! பக்தர்களுக்கு பிரியமானவனே! தியாகராஜன் வணங்குபவனே! சிறந்ததான நாகாசலம் எனும்படியான திருமலையில் நிலைத்து எழுந்தருளியுள்ளவேங்கடநாதனே!
(உனக்கான பதினுயிரம் கண்கள் வேண்டும்)

திருமலையில் இரண்டாவது பிரம்மோற்சவத்தினபோது வண்ண மின் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட கோயிலின் முகப்புத் தோற்றம்.



ஸத்குரு தியாகய்யரின் வருணனை சற்று பார்ப்போம். வேங்கடவன் திவ்யரூபம் காண இரு கண்கள் போதாது. பதினுயிரம் கண்கள் தேவை என்பது முற்றிலும் உண்மை. திருமாலின் அழகு வர்ணனைக்கு அப்பாற்பட்டதாகும். பக்தர்களுக்கு வேண்டியபடி வரம் அருளும் தயாநிதியாக கற்பகத்தருவாக இருக்கிருர் என்று கூறியதற்கு சான்று இன்று இலக்ஷக் கணக்கான பக்தர்கள் வண்டுகள் பூக்களை மொய்த்துக் கொள்வது போல் இன்று ஸப்தகிரி வாசனை சூழ்ந்து கொள்ளும் காட்சியே போதுமானதாகும். இதற்கும் மேலான தத்துவத்தையும் தியாகராஜர் எடுத்துரைக்கிருர். மக்கள் மதம் மாச்சர்யம் முதலான வலைகளில் அகப்பட்டு அல்லல் படுகின்றனர் என்கிற உண்மையை தனக்குக் கூறிக்கொள்வது போல் கூறி உலக மாந்தர்களை இவ்வித மாயையிலிருந்து விடுவித்து காத்தருள்வாயாக என்று நமக்காக மனதார உருகிவேண்டிக் கொள்வதுதான் சிகரமாய் அமைந்து விடுகிறது. மகானுபாவர்கள் நம்மை உய்விக்கவே அவதாரம் செய்கின்றனர். பரமன் மீது இன் சுவைப் பாக்களை புனைகின்றனர்.

இவ்வாருக ஸ்ரீநிவாசப் பெருமானை வணங்கி அதி அற்புதமான இருகிருதிகளைப்பாடி ஹரிகேசவனைப் போற்றிய ஸத்குரு ஸ்ரீ தியாக பிரம்மம் வாழ்க! உன்னதமான இரு கீர்த்தனைகள் தம் மீது புனையும்படி செய்த திருவேங்கடநாதனின் லீலா விபூதி என்றென்றும் வாழ்க!!

ஸ்ரீ குருப்யோ நமः

# பாண் பெருமாள்

ஆர். ரங்கநாதஸ்வாமி அய்யங்கார்,
கோடகநல்லூர்.



பகவானை அங்கமங்கமாகத்தரிசித்து ஆனந்த பரவசம் அடைவது ஒரு சிறந்த பக்தியாகும். தேசிகர், சங்கரர், திருப்பாணுழ்வார் இவர்கள் இதில் திகழ்ந்தனர். ஆழ்வார்களிடத்தில் மிகுந்த பக்தி பூண்ட ஸ்வாமி நிகமாந்த தேசிகனுக்கு திருப்பாணுழ்வாரிடம் விசேஷப் பிரேமையிருந்ததாகக் கூறலாம். இவ்வாழ்வாரை நினைக்குங்கால் பரவசமடைகிருர், பாணர் என்கிருர்; பாண்பெருமாளென்கிருர்; நம் பாணனென்கிருர்; என் பாணன் என்கிருர். இவ்வாழ்வார் பாடிய பத்துப் பாட்டும் 'தமிழ் மறையின் பயன்' 'பல மறையின் பொருள்' என்றெல்லாமியம்புகிருர். மேலும் கீழ்வருமாறு கூறுகிருர்:

நீதியறியாத நிலையறிவார்க்கெல்லாம்
நிலையிதுவே யென்று நிலை நாடி
நின்றேம்
வேதியர் தாம் விரித்துரைக்கும்
விளைவுக்கெல்லாம்
விதையாகுமிதுவென்று
விளம்பினேமே.

தேசிகன் பகவத்யான ஸோபானம் அருளும் பொழுது மனத்தின் கண் பாணரையும் ஞாபகப்படுத்தியிருக்க வேண்டுமென்பதில் ஐயமில்லை.

திருப்பாணுழ்வார் சுமார் ஆயிரத்து இருநூறு வருஷங்களுக்கு முன் ஒரு கார்த்திகை மாதம் கண்ண பிரான் பிறந்த ரோகிணி நக்ஷத்திரத்தில், ஸீதாப்பிராட்டியார் ஆண்டாள் இவர்களைப்போல் அயோனிஜராகப் பிறந்து ஒரு உத்தம பாணர் குல தம்பதியால் கண்டெடுக்கப்பட்டு அருமையாக வளர்க்கப்பட்டார். பால்ய வயது முதலே ஸங்கீதக் கலையிலும் யோகாப்பியாஸத்திலும் சிறந்து விளங்கினுர். வீணையும் கையுமாக நாரத பகவான்போல் பகவந்நாம ஸங்கீர்த்தனஞ் செய்து காலத்தைக் கழித்தார். அவர் பேசியதும் பாடியதும் எல்லாம் கண்ணனையே. 'உண்ணும் சோறும் பருகு நீரும் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணனே.' ஸ்வாமி தேசிகர் இதைக்குறிப்பிடும்போது 'காண்பனவு முரைப்பனவு மற்றென்றின்றிக் கண்ணனையே கண்டுரைத்த கடிய காதல்' என்று பகர்கிருர். தான் தீண்டாத வகுப்பைச் சார்ந்தவன் என்று நினைத்து அரங்கன் உறையும் ஸ்ரீரங்கத்துக்கே வராமல் காவேரிக்கு அக்கரையில் நின்று அரங்கன் இருக்குமிடம் நோக்கி அவனை மனத்தில் இருத்தி தேனினும் இனிய தன் யாழ்வாத்தியத்தோடு தன் குரலை இசைத்து ஆடியாடி அகங் கரைந்து பாடிப் பாடிக் கண்ணீர் மல்கினுர். நீர்ப்புயென்றக்க, நீரண்டலக, பல அங்கிசன் சரிந்தவ. ஐம்பது இருக்கலாம்.

தன் பக்தன் பாடல்களைக் பரமானந்தம் கொண்ட ரங்கநாதரும் பாணரை இனி இவ்வுலகில் கஷ்டப் படுத்தக் கூடாது என்று நினைத்தார். தன் கோவிலில் மடப்பள்ளி வேலைப் பார்த்துவரும் லோகசாரங்க முனிவரின் கனவில் தோன்றி பாணரை தோளில் ஏற்றிவந்துதன்முன்கொண்டு வரும்படி கட்டளையிட்டார். ஆண்டவன் கட்டளையை அப்படியே சிரசில் தாங்கி பாணரிடம் அரங்கன் கட்டளையைத் தெரிவித்து அவரை உலகமறிய ஆயிரக்கணக்கான மக்கள் பார்த்து நிற்க தன் தோளின் மேல் ஏற்றிச் சுமந்துகொண்டு வந்து அரங்கன் முன் கொண்டு விட்டார் முனிவர். முனிவர் தோள் ஏறின பாண் முனிவரும் அரங்கனையே கருத்தில் வைத்து வேறு ஒன்றையும் கவனியாமல் அரங்கன் ஸந்நிதி வந்ததும் அம்மூர்த்தியைக் கண்ணுற்று புளங்காங்கிதம் அடைந்தார். அரங்கன் திவ்ய எழில் ஆழ்வார் மனத்தில் அச்சடித்ததுபோல் அப்படியே பதிந்து நின்றது. ஸ்ரீவத்ஸத்தின் அம்சமாகிய ஆழ்வார் பகவானை திருவடி முதல் அவர் திருமுடி முடிய படிப்படியாக தியானம் செய்கிருர். அந்த தியானம் ஒரு பதிகமாக பரிணமித்து கேட்போர் உள்ளமும் உடலும் ஒருங்கே பூரிக்கச் செய்தது. ஆனந்தக் கண்ணீர் கண்களில் ததும்பியது.

ஆனுல் அடிக்கடி ஆழ்வாருக்கு ஒரு பயம் மனதில் புகுந்தது. மலமுள்ள வணுகிய நாம் மலமேயில்லாத எம்பெருமான் பக்கலில் வந்தால் நம்முடைய மலம் அவனையுமடைந்துவிடக் கூடாதே என்பதுதான். அவ்வளவு பிரேமை அரங்கனிடம் அவருக்கு இருந்தது. அமலன், விமலன், நின்

மலன்-என்ற மூன்று சொற்களை முதல் பாட்டில் நாம் பார்க்கிறோம். எட்டாவது பாட்டைச் சொல்லும்போது கூட இந்த பயம் விட்டபாடில்லை என்று தோன்றுகிறது. 'அரங்கத்தமலன்' என்கிறார் பாணர்.

பாணர் நாட்டம் முழுவதும் அரங்கன் திருவடிகளில் விழுகிறது. 'அரங்கத்தம்மான் திருக்கமலப் பாதம் வந்தென் கண்ணி னுள்ளன வொக்கின்றதே' என்கிறார் பாணர். திருவுக்கு உகந்த திருவடிகளல்லவா அவை? தாமரை மலர்போன்ற அழகிய மிருதுவான திருவடிகள். திருக்கமல பாதத்தை தேசிகர் வர்ணிக்கும் பொழுது 'லக்ஷ்மீ பூம்யோः கரஸரஸிஜை: லாலிதம் ரங்கபர்த்து: பாதாம்போஜம்.' ஸ்ரீதேவி பூதேவிகளின் தாமரை மலர்போன்ற கைகளினால் உபசரிக்கப்படும் ரங்கநாதனின் திருவடித்தாமரை என்று கூறுகிறார். ஆதி சங்கரரும் விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்திரத்தில் 'பத்மாக்ஷஸ்ய அங்க்ரிபத்ம த்வயதல நிலயா:' 'தாமரைக் கண்ணனின்தாமரை அடித்தலத்தை இருக்குமிடமாகக் கொண்ட' என்று வர்ணிக்கிறார்.

திருவடிகளைத் தாண்டி ஆழ்வார் திருஷ்டி அரங்கன் பீதாம்பரத்தின் அழகில் அமர்கிறது. 'சென்றதாம் என் சிந்தனையே.' தேசிகர் 'க்ஷௌமாச்லிஷ்டம்' என்று இப்பீதாம்பரத்தால் சுற்றப்பட்ட இரு துடைகளையும் சேர்த்து இன்னும் அலங்கார ரஸங்களோடு அனுபவிக்கிறார். பாணர் அடுத்தப் பாட்டில் பீதாம்பரத்தை 'அந்தி போனிறத்தாடை' அந்தியில் செவ்வானம் போன்ற நிறத்தோடு கூடிய பீதாம்பரம் என்று வர்ணித்து அதற்குமேல் தெரியும் உந்தியை தன் உள்ளத்து இன்னுயிர்போல் நினைத்து ஆனந்தம் அடைகிறார். ஏன்? 'அயனைப் படைத்ததோரெழில் உந்தியல்லவாவென்று ஆழ்வார் எண்ணுகிறார். (நாபீகேன ஸ்புரித ரஜஸா) வேதஸோ நிர்மமாணு' என்கிறார் தேசிகர்). உந்திக்குப் பிறகு அரைஞாணைப் பாடுகிறார் ஆழ்வார். அரங்கனை அணைந்த அழகிய ஆபரணம் அல்லவா? 'அரங்கத்தம்மான் திருவயிற்று தரபந்தன மென்னுள்ளத்தில் நின்றுலாகின்றதே' என்றியம்புகிறார் பாணர். ஐந்தாவது பாட்டில் அரங்கனின் திருமார்பின் எழில் ஆழ்வாரை ஆட்கொண்டதாகக் கூறுகிறார். அம்மார்பில் இலங்கும் ஸ்ரீவத்ஸத்தின் அம்சம் அல்லவா அவர். தேசிகன் பகவத்தியான ஸோபாநத்தில் செய்திருக்கும் வர்ணனை மிகவும் அற்புதமானது. 'ஸ்ரீவத்ஸேந ப்ரதிதவிபவம் ஸ்ரீ பதந்யாஸ தந்யம்' என்று ஆரம்பிக்கிறது. ஸ்ரீவத்ஸத்தாலும் லக்ஷ்மி தேவியின் திருவடி படுவதாலும் அதற்கு விசேஷப் பெருமை. மேலும் கௌஸ்துபமணி வைஜயந்தி மாலை முதலியவற்றால் திருமார்பு அழகுபடுத்தப்படுகிறது மட்டுமல்ல. தியானம் செய்யப்பட்டவர்களின் வருத்தங்களைப் போக்கடிக்கவல்லது. ஆதி சங்கரர், ஸ்ரீவத்ஸம் லக்ஷ்மிக்கு அது. ஒரு பிரிய 'வத்ஸ' குழந்தைபோலிருக்கிறது என்கிறார். அரங்கனின் மார்பை தியானஞ் செய்யுங்கால் அது அவரை அப்படி ஆட்கொண்டதற்கு தான் யாது தவம் செய்தேன் என்று ஆச்சரியப்படுகிறார். அரங்கன், ஆழ்வார் செய்த வினைகளைத் தீர்த்துக்கட்டி, அவரைத் தன் அந்தரங்க பக்த கோஷ்டிகளில் சேர்த்துக் கொண்டு மேலும் அவரிடம் 'புகுந்தான்' ஆழ்வாரின் உடல் அரரகன் வசம் ஆகிவிட்டதை முற்றும் தெரிந்து கொண்டார்.

அரங்கன் கழுத்தின் பெருமையை நினைத்துப் பின் விம்முகிறார். அண்ட சராசரங்களை உண்ட கண்டமல்லவா. 'அண்டரண்ட பகிரண்டத்தொருமானில மெழுமால் வரை முற்றும் உண்ட கண்டம் கண்டீர்' என்ற சொற்கள் பீறிக் கொண்டு வருகின்றன. ஆழ்வாரின் சிந்தனையை அரங்கனின் செய்யவாய் அப்படியே கவர்ந்து விட்டது. ஆண்டாள் பாடிய 'திருப்பவழச் செவ்வாய்' அல்லவா அவை? லக்ஷ்மி தேவிக்கும் கூட தெரியாத அதன் பெருமை பாஞ்சஜன்யத்திற்கு அன்றே தெரியும்!

அடுத்தப் பாட்டில் பக்தர்கள் துயரைப் போக்கும் பெருமாளின் கண்களின் அழகு விவரிக்கப்பட்டிருக்கிறது, நீண்ட, கரிய, விசாலமான கண்கள்; செவ்வரி கூடிய கண்கள்; அவை 'என்னைப் பேதமை செய்தனவே,' என்று குழைகிறார்.

பின் அரங்கன் உருவத்தைச் சேர்த்து ஒன்றாக அனுபவிக்கிறார். அவன் நீல மேனியும் அதில் விளங்கும் அழகான 'மணியாரமும் முத்துத் தாமமும்' அப்படியே ஆழ்வார் நெஞ்சை தஞ்சமிடச் செய்துவிட்டது.

கடைசிப் பாட்டு இப்பதிகத்துக்கு சிகரம்போல் விளங்குகிறது. அவர் உள்ளத்தைக் கவர்ந்த மாமாயனை, கொண்டல்வண்ணன் மற்றும் வெண்ணையுண்ட வாயன் என்கிறார். அண்டர் கோன் அணியரங்கனென்கிறார் பின் ஒரே சொல்லில் என் அமுது என்று முடித்து அவனைக் 'கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்று மனம் விண்டு விம்மவே அரங்கன் அருள்காட்டி ஆழ்வாரை அப்படியே தன் ஜோதியில் கலக்கும்படி செய்து விடுகிறார். ஆழ்வார் பூத உடல் மறைந்து புகழுடம்பு எய்துகிறார்.

பிரணவத்தின் மூன்று எழுத்துக்களாகிய அ, உ, ம என்னும் எழுத்துக்களைக் கொண்டு முதல் மூன்று பாட்டுக்கள் முறையே 'அமலன்' 'உவந்த', 'மந்திபாய்' என்று பதிகம் ஆரம்பிக்கப் படுவதை நோக்குக. இலங்கைக்கிறைவன் தலைபத்து உதிரவோட்டிய இராம பிரான் பெருமையையும் கிருஷ்ணாவதாரத்தில் பிரியனாக வந்த அவுணனுடல் கீண்டதும் ஞாலமேழு முண்டதும்-இந்த மாதிரிஸம்பவங்களை ஊடே ஊடே ஆழ்வார் எடுத்துக் காட்டுகிறார். எம்பெருமான், தன்னை நம்பிய வருடைய பழவினை பற்றறுப்பான் என்கிற நம்பிக்கையை நமக்கு ஊட்டுகிறார்.

'கண்டபாத கமலம் நல்லாடையுந்தி தேட்டருமு தரபந்தம், திருமார்பு கண்டம் செவ்வாய் வாட்டமில் கண்கள் மேனி' இப்படி எம்பெருமானை அங்கமங்கமாக பரவசப்பட்டு அனுபவிக்கும்படியான பக்தியை அவனே பக்தர்கள் மனத்தில் துளிர்க்கச் செய்யும்படி நாம் பிரார்த்திப்போமாக.

**செம்பொன்னடி முடியளவும் சேவிப்போன் வாழியே**
**திருப்பாணன் பொற்பாதங்கள் செகதலத்தில் வாழியே.**

6 ஆம் பக்கத் தொடர்ச்சி

இவ்வாறாக அவன் கோவிந்தனுறன் என்கிறுள் ஆண்டாள். கோவர்த்தன கிரியை கிருஷ்ணன் தூக்கிய நிகழ்ச்சியை எடுத்தியம்பும் ஆண்டாள் தனது 'நாச்சியார் திருமொழி'யில் பின் வருமாறு கூறுவாள்:

உள்ளே யுருகி நைவேனை
உளளோ இலளோ வென்னாத
கொள்ளை கொள்ளிக் குறும்பனைக்
கோவர்த்தனனைக் கண்டக்கால்
கொள்ளும் பயனென்றில்லாத
கொங்கை தன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட்டவன் மார்பில்
எறிந் தென் அழலை தீர்வேனே !

(நாச்சியார் திருமொழி 13ம் பத்து 8வது பாசுரம்)

'என்னை மிகவும் வருத்தப்படுத்தி, இவள் இருக்கிறுளா ? இறந்துபோய் விட்டாளா? என்று கவனிக்காமல் என் உள்ளத்தை கொள்ளையடித்துக் குறும்பு செய்யும் கோவர்த்தனனைப் பார்த்தால் நிஷ்பலமான எனது கொங்கைகளை ஸமூலமாகப் பிடுங்கி அவன் மார்பில் எறிந்து என் தாபம் தீர்ந்திருப்பேன்' என்கிறுள் ஆண்டாள். இங்கு 'கொங்கைகளை எறிதல்' என்றால் பக்தியை அர்ப்பணித்தல் என்றே பொருள் கொள்ளவேண்டும். கண்ணனென்றும் கருந்தெய்வம் காட்சிப் பழகிக் கிடப்பவளான எனக்கு, கிருஷ்ணன் கிடைக்காமல் போனுல், இந்த கொங்கைகள் இருந்து என்ன பயன் என்று கோதை கருதினுள் போலும் !

கிருஷ்ணன்கோவர்த்தனகிரியை இவ்வாறாக ஏழு நாட்கள் தூக்கிப்பிடித்துக்கொண்டிருந்தான். கோபர்களையும் கோபிகைகளையும் பார்த்து ''பசுக்களுடன் கூட இந்த மலையினுள்ளே பிரவேசியுங்கள். என் கையினின்று இந்த மலை விழுந்து விடுமோ என்கிற பயம் உங்களுக்கு வேண்டாம்' என்றுன். உடனே கோபகோபிகைகள் பசுக்களுடனும் வண்டிக் கூட்டங்களுடனும், வேலைக்காரர்கள் புரோஹிதர் இவர்களுடனும் மலையினுள் பிரவேசித்தனர். பசி, தாகம் இவற்றையும் விட்டு விட்டு அவர்கள் கிருஷ்ணன் மலையைத்தாங்கி நிற்பதை வியப்புடன் பார்த்தனர். அவர்கள் மட்டுமா பார்த்தனர். பெரியாழ்வார் தனது பாசுரத்தால் அழகுற விளக்கி தான் கண்டதை வெளியிடுகிற அழகைப் பாருங்கள்:

'கொடியேறு செந்தாமரைக் கை
விரல்கள் கோலமு மகிழ்ந்தில
வாடிற்றில,
வடிவேறு திருவுகிர் நொந்து மில
மணிவண்ணன் மலையுமோர்
சம்பிரதம்'

என்கிறுர். ரேகைகளுடன் கூடிய த்வஜத்தையுடைய செம்மையான தாமரை மலர் போன்றதான கிருஷ்ணனுடைய திருக்கையும், அதிலுள்ள திருவிரல்களும் இயற்கையான அழகு அழியாமல் (ஏழு நாள் மலையைத் தாங்கிப் பிடித்து நின்ற போதும்) இருந்ததாம். மலையைத் தாங்குவதால் கண்ணன் கஷ்டப்பட்டானில்லை, அழகான அவனது திருநகங்களுக்கும் நோவு எடுக்கவில்லையாம். ஆகவே நீலமணியையொத்த நிறத்தையுடைய கிருஷ்ணன் தாங்கிய மலையும், அவன் அவ்வாறு தாங்கிநின்ற நிலையும் ஒரு 'இந்திரஜால வித்தை' போன்று விளங்குவதாகக் கூறுகிறுர் பெரியாழ்வார். உண்மைதான்! இதுவும் இந்திரனுக்கான இந்திரஜால வித்தையே.

ஏழு வயது நிரம்பிய கிருஷ்ணன் கோவர்த்தன மலையை குடையாகப் பிடித்தபோது தண்டாகாரமான (கழி போன்ற) அவனது திருக்கை குடைக் காம்பாக ஆயிற்றும். ஐந்து விரல்களும் பிரிந்த நிலையிலுள்ள குடையின் 'மேல் நோக்கிய கம்பிகளாக' ஆயினவாம். இவ்வாறாக மலையை குடையாக அநாயாஸமாகத் தூக்கிய கிருஷ்ணன் தன்னுடைய லீலையும் ஆச்சரியத்தை விளைவிக்கக் கூடியதோ? என்று கேட்

கிறுர் வேதாந்த தேசிகன் தனது 'யாதவாப்யுதயம்' என்கிற காவியத்தில்:

ஸ பாஹுா தண்டேன வஹன் ஸலீலம்
ப்ரவால கல்பாம் குலி பஞ்சரேண |
மஹீதரச்சத்ர மனன்ய வாஹ்யம் மாயா
மயீம் வ்யாகுருதேவ லீலாம் ||

என்று. திருமங்கையாழ்வாரும் திருவல்லிக்கேணி எம்பிரானை மங்களாசாசனம் செய்ய வந்தவர் கோவர்த்தன கிரியை தாங்கியவனாக பார்த்தசாரதியை ஏத்தி வழிபடுகிறுர்.

'இந்திரனுக் கென்றுயர்களெடுத்த
எழில்விழவில் பழநடை செய்
மந்திரவிதியில் பூசனை பெருது
மழை பொழிந்திடத்தளர்ந்து, ஆயர்
எந்தமோடின வாநிரை தளராமல்
எம்பெருமான் அருளென்ன
அந்தமில் வரையால் மழைதடுத்
தானைத்
திருவல்லிக் கேணிக் கண்டேனே'

(பெரிய திருமொழி 2-3-4)

என்று. ஸ்ரீகிருஷ்ணன் கோவர்த்தன கிரியைத் தாங்கி நின்ற அழகை 'அட்டுக்குவி' என்கிற பதிகத்தில் பெரியாழ்வார் நன்கு அனுபவிக்கிறுர். இவ்வாறு கிருஷ்ணன் மலையைத் தாங்கியதைக் கண்ட இந்திரன், அவனுடைய மஹிமையைக் கண்ணுற்று அதிகம் ஆச்சரியமடைந்தவனுய் கர்வத்தை விட்டொழித்து தனது மேகங்களை விலக்கினுன். மழையும் நின்றது. உடனே கிருஷ்ணனும் கோபகோபிகைகளைப் பார்த்து, 'பயம் வேண்டாம், மலையினின்று வெளியே வாருங்கள், மழை நின்றுவிட்டது' என்றுன். அவர்களும் அவ்வாறே வெளியே வந்தனர். அவர்களில் பெரியவர்களான கோபர்கள் கிருஷ்ணனை ஆசீர்வதித்தனர். சந்தோஷமடைந்த கோபிகைகள் பிரேமையினுல் மனத்துக்கினிய வல்லானை கோவர்த்தனுேத்தரணம் முதலிய சிறந்த செயல்களுக்காக விசேஷமாக புகழ்பாடிக்கொண்டு தந்தம் இல்லம் நாடிச் சென்றனர்.

கிருஷ்ணனுடைய மஹிமையைக் கண்ணுற்று வெட்கித் தலை குனிந்த இந்திரன் 'சித்தம் செவ்வை நில்லாது என் செய்கேன் தீவினையேன், பத்திமைக் கன்புடையேன்' என்றும், 'நின் அடிமையல்லால் யாதுமொன்றறிகிலேனே' என்றும் எண்ணினவனுய், கிருஷ்ணன் ஏகாந்தமாக (தனித்து) இருக்கும்போது அவனருகில் வந்தான். கைகளை கூப்பிக்கொண்டு, 'கிருஷ்ணு! உலகத்துக்குத்தந்தையாகவும், குருவாகவும், வழி நடத்திச் செல்பவனுகவும், அழிவே இல்லாத கால ரூபியாகவும் இருக்கிற நீ, தண்டனையை கொடுத்துக் கொண்டு, 'உலகத்துக்குத் தலைவன்' என்கிற அஹம்பாவத்தை உடையவர்களின் அஹங்காரத்தைப் போக்கிக் கொண்டும் ஜீவர்களின் க்ஷேமத்திற்காக லீலாவதாரங்களை எடுத்துவருகிறுய்'

பிதா குருஸ்த்வம் ஜகதா மதீசோ
துரத்யய: கால உபாத்த தண்ட: |
ஹிதாய ஸ்வேச்சா தனுபி: ஸமீ ஹஸே
மானம் விதுன்வன் ஜகதீசமானிநாம் ||

என்றும், 'கிருஷ்ணு! உனது லீலைகளே கொடியவர்களுக்குத் தண்டனையாக அமைகிறது. ஆகவே எனது புத்தி இவ்வாறு கெட்டதாக ஆகாது இருக்க அருள வேண்டும்' என்று ப்ரார்த்தித்தான் இந்திரன். உடனே கிருஷ்ணன், 'இந்திரனே! இந்திரப் பதவிக்குரிய செல்வத்தினுல் மிகவும் மதங்கொண்ட உனக்கு என்னுடைய பக்தி உண்டாக வேண்டும் என்பதற்காக (உண்ணும் சோறும்பருகு நீரும், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணனன்றே. என்னுல்யாகம் தடுத்து நிறுத்தப்பட்டது. உனக்கு க்ஷேமமுண்டாகட்டும்' என்றுன். உடனே காமதேனு தனது ஸந்ததிகளான பசுக்கூட்டங்களுடன் கிருஷ்ணனை பலவாறு ஸ்தோத்திரம் செய்து, 'ஹே ஜகத் பதே! நீ எங்களுக்கு மேலான தெய்வம். பசு, அந்தணர், தேவர் இவர்களுடையவும் ஸாதுக்களுடையவும் க்ஷேமத்திற்காக நீ எங்களுக்கு இந்திரனுக வேண்டும். பிரம்மதேவன் கட்டளைப்படி உன்னையே நாங்கள் இந்திரனுக பட்டாபிஷேகம் செய்யப் போகிறேம்' எனக்கூறி தன்னுடைய பாலினுல் அபிஷேகம் செய்தது. இந்திரன் ஐராவதத்தின் துதிக்கையினுல் கொண்டு வரப்பட்ட ஆகாச கங்கையின் புனித நீரால் தேவ ரிஷிகள் உடனிருக்க கிருஷ்ணனுக்கு திருமஞ்ஜனம் (அபிஷேகம்) செய்து 'கோவிந்தன்' என்று பெயரிட்டான். 'அப்யஷிஞ்சத தாஸார் ஹம் கோவிந்த இதி சாப்யதாத்' கூப்பியகையுடன் கிருஷ்ணனைப் பார்த்து இந்திரன் சொன்னுன்: 'கிருஷ்ணு! நான் தேவர்களுக்கெல்லாம் இந்திரன். நீ பசுக்களுக்கு இந்திரனுக இருக்கிறுய். ஆகவே பூமியிலுள்ள மக்களும், மற்ற உலகங்களில் உள்ளவர்களும் உன்னை 'கோவிந்தன்' என்று அழைக்கப் போகின்றனர்' என்றுன்.

அஹமிந்த்ரோ ஹி தேவாநாம் த்வம்
கவாமிந்த்ரதாம் கத: |
கோவிந்த இதி லோகே த்வாம்
காஸ்யந்தி புவி மானவா: ||

என்று. மேலும் தேவேந்திரன் கூறினுன் 'கிருஷ்ணு! முன்பொரு ஸமயம் வராஹ ரூபமெடுத்து ஸமுத்திரத்தில் மறைந்திருந்த பூமியைத் ['கோ'வை] திரும்பப் பெற்று கோவிந்த என்கிற பெயரைப் பெற்றுய்! 'காம் விந்ததி பூமிம் லபதே இதி கோவிந்த:' இன்று ஆய்ப்பாடியில் ஆயர் கூட்டத்தில் கிருஷ்ணனுக அவதரித்து பசுக்கணங்களை நன்கு பாதுகாப்பதால் (கா: விந்ததீதி கோவிந்த:)மீண்டும் 'கோவிந்தன்' என்கிற சுபமான திருநாமத்தை தரிக்க வேண்டுமென்று ப்ரார்த்தித்தான். இக்கருத்தை ஸ்வாமி தேசிகன் யாதவாப்யுதயத்தில் அருளிச் செய்கிறுர். இவ்வாருக இந்திரன் கிருஷ்ணனுக்கு 'கோவிந்த பட்டாபிஷேகம்' செய்து க்ருதார்த்தனுனுன். 'கொம்பினுர் பொழில் வாய்க்குயிலினங் கோவிந்தன் குணம் பாடும்'போது நாமும் அவன் புகழ் ஏதமின்றி உரைப்போம்.



தொடர் கட்டுரை :

# முக்கவி கண்ட காப்பியம்

## "சுந்தர காண்டம்"

திரு. பு. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(காசியபன்)
திருப்பதி.

ஹநுமனின் திருவுருவத்தைப்பற்றி,

**पृषान् मूषिकान् दशतीति पृषदंशकः मार्जारः**
**" ओतुर्बिडालो मार्जारो पृषदंशक आखुभुक् "**

என்று அமர நிகண்டு கூறுகிறது. துளசி தாஸர் இவ்விஷயத்தில் விளக்கமாக ஒன்றும் கூறவில்லை. ஹநுமன் நாடகத்தில் "**भूत्वा द्विदंशः । अकलितपरिमाणो मात्रया सत्रपस्तां क्षिपति**" என்று கூறப்பட்டுள்ளது.

கம்பரோவெனில் பெரும் உடலை சுருக்கிக்கொண்டாரென்று கூறுகிறார். இலங்காதேவி ஹநுமனைத் தடுத்து நிறுத்தி "நீயார்?" என்று கேட்டது. ஹநுமான் "நான் இந்த இலங்கையைச் சுற்றிப் பார்த்துப் போகலாமென வந்துள்ளேன்" என்று கூற, அதற்கு அத்தேவதை உன்னை விடமாட்டேன். என்னுடன் யுத்தம்செய்து ஜெயித்துவிட்டுப்போ." என்றது. மறுமுறையும் அதே வார்த்தைகளை ஹநுமான் கூற, தேவதை அனுமனின் கன்னத்தில் ஓர் அறை விட்டது. ஹநுமான் உடனே, பெரிய ஒலி எழுப்பி, இடது கை விரல்களால் அத்தேவதையை ஓர் சுழற்று சுற்றித்தூக்கி எறிந்தார். அவள் மூர்ச்சையடைந்து வீழ்ந்தாள். ஹநுமான் ஒலியெழுப்பியதை '**सुमहानादम्**' என்று குறிப்பிடுகிறார் வால்மீகி. அதாவது அநுமான் சப்தம் போட்டால்கூட இனிமையாக இருக்கும் என்பதைக் கூறுகிறார். ஹநுமான் ஸங்கீதோபாஸகர். அவரைப்பற்றி ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் ஸங்கீத உபாஸகர்களின் வரிசையில் ஹனுமனைக் குறிப்பிடும்போது, "பிருங்கி நடேச ஸமீரஜ" என்றும், இதே போல் 'விதுலகு' என்ற "மாயா மாளவ கௌள" ராக கீர்த்தனையில் "அமரேச பரத காச்யப சண்டீச ஆஞ்ஜனேய" என்றும்,

"ஸீதாபதி சரணுப்ஜமு னிடு கொன்ன
வாதாத்மஜுனிகி பாக தெலுஸுரா"
கீதார்த்தமு ஸங்கீதானந்தமு"

என்றும் கூறுகிறார். ஆகையால் வால்மீகி "**ननाद सुमहानन्दम्**" என்று கூறுகிறார். ஹநுமான் முதன் முதலில், பெண்ணைக் கொல்வானேன் என்று சமாதானமாகச் சொல்லிப் பார்த்தார். பிறகு அவளை ஒரே அடியாக அடித்துப் போட்டார். உடனே அவள், 'நான் இலங்கையின் அதிதேவதை. நான் உன்னால் தோற்கப்பட்டேன். பிரம்மாவினால் எனக்கு ஏற்பட்ட சாபம் உன்னைப் பார்த்ததினால் விமோசனமாகிவிட்டது. நீ இனி எத்தடையுமின்றி இலங்கைக்குள் செல்லலாம்' என்று கூற, ஹநுமான் நேர் வழியாகச் செல்லாமல் மதிலைத் தாண்டிச் சென்றார்.

**अद्वारेण महाबाहुः प्राकारमभिपुप्लुवे**

இங்கு வால்மீகி இலங்கைத் தேவதையைக் கொன்று பிறகு இலங்கையை அடைந்தாரென்று கூறுகிறார். ஆனால் இலங்கையில் நுழைந்தபின் இலங்கைத் தேவதையைக் கொன்றதாகக் கம்பர் கூறுகிறார். ஹநுமான் நேர் வழியாகப் போகாததற்குக் காரணம் உள்ளது.

**ग्रामं वा नगरं वापि पत्तनं वा परस्य हि ।**
**विशेषात् समये सौम्य नद्वारेण विशेन्नृपः ।।**

பகைவனுடைய நகரத்தையோ, பட்டணத்தையோ, கிராமத்தையோ நேர் வழியில் அடையக் கூடாது என்று என்று கூறப்பட்டுள்ளது. கம்பரும் இந்தக் கருத்தையே கூறுகிறார்.

"வாயில் வழிசேறல் அரிது !
அன்றியும், வலத்தோர்
ஆயில் அவர் வைத்த வழி யேகல்
அழகு அன்றால்
காப் கதிர் இயக்கின் மதிலைக்
கடிது தாவிப்
போப் இ நகர் புக்கிடுவென் என்று
ஓர் அயல் போனான்"

"திறமையுள்ளவனை நான் பகைவரான அரக்கர் அமைத்துள்ள வாயிலின் வழியாய்ச் செல்லுதல் அழகன்று" என்று கூறி மதிலைத் தாண்டினான் என்று கூறப்படுகிறது. இக்கருத்து அத்யாத்ம ராமாயணத்திலும், துளசி ராமாயணத்திலும் காணப்படவில்லை. ஹநுமான் இலங்கைக்குள் பிரவேசிக்கும்போது எதிரிகளின் தலையில் காலை வைப்பதுபோல் இடது காலை எடுத்துவைத்தார். கால்களை வைக்கவேண்டிய முறைகளையும் சந்தர்ப்பங்களையும் பிருஹஸ்பதி கீழ்வருமாறு கூறுகிறார்.

**प्रयाणकाले च गृहप्रवेशे विवाहकालेऽपि च**
**दक्षिणाङ्घ्रिम् ।**
**कृत्वाग्ततः शत्रुप्रवेशे वामं विदध्यच्चरणं**
**नृपालः ।।**

"பிரயாண காலத்திலும், கிருஹப்பிரவேச காலத்திலும் விவாஹ காலத்திலும் வலது காலை எடுத்து வைத்துச் செல்ல வேண்டும். எதிரிகளின் இடத்திற்கு போகும்போது இடது காலை எதித்து வைத்துப்போக வேண்டும்." இலங்கையிலுள்ள மாட மாளிகைகளை வர்ணிக்கிறார் வால்மீகி.

**सिताभ्रसदृशैश्चित्रैः पद्मस्वास्तिकसंस्थितैः ।**
**वर्धमानगृहैश्चापि सर्वतः सुविभूषिताः ।।**

மேலே கூறப்பட்ட வீடுகளின் பெயர்கள் மனை சாஸ்த்ர முறைப்படி கட்டப்பட்டவைகள்.

(தொடரும்)

# மதிப்புரை

## ஸ்ரீவேங்கடேச ஸுப்ரபாதம் - தமிழாக்கம்
## ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவை - விளக்க உரை.

**கவிஞர். கண்ணதாசன்**

ஸ்ரீ வேங்கடேச ஸுப்ர பாதத்தைத் ''தமிழிலே ஆக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்குத் தோன்றிற்று. கண்ணபிரான் அருளால் கடமையை முடித்துவிட்டேன்'', என்று முன்னுரையில் கவிஞர் கூறுவது சரியே. ஆனால் அதனை அடுத்து, ''மூலக் கருத்தை விட்டுவிடாமலும் சொந்தக் கருத்தைச் சேர்க்காமலும் எழுதியுள்ளேன்'' என்று அவர் கூறுவது ஒரு சில இடங்களில் பொருந்துவதாக இல்லை. எடுத்துக் காட்டாக முதல் பாடலையே குறிப்பிடலாம்.

'' கூவியது சேவலதன்
கோலமொழி கேளாய்,''

'' பூசிவரும் செங்கதிரோன்
பூத்துவரும் நேரம்
பூபாளம் பாடுகின்றோம்
பொன்மாலே வாராய்''

என்ற கருத்துக்கள், ''கௌஸல்யா ஸுப்ரஜா ராம'' எனத் துவங்கும் பாடலில் வரவில்லை. காலைப்போது புலர்வதைக் கவிஞர் தம் கவிநயந் தோன்ற அவ்வாறு கூறுவதாக அமைதி கூற வேண்டும். இந்தப் பாடல் வேள்வி காக்க அழைத்துச் சென்ற விசுவாமித்திரர் இராம இலக்குவனரை வைகறையில் எழுப்பும்போது பாடியருளிய தாகும். தன்னோடு சேர்ந்து இராம இலக்குவனர் நித்திய கருமம் செய்வதற்காக விசுவாமித்திரர் எழுப்புவதாகும் இது. ஆனால்,

'' ஆசையுடன் வேண்டுகிறோம்
அடியவர்கள் ஒன்றாய்
ஆனந்தத் திருமாலே
துயிலெழுவாய் அண்ணல்''

என்ற பகுதி மூலப் பொருளைக் கடந்து செல்கிறது.

இன்னும் சில இடங்களில் மூலத்தின் உணர்ச்சி வேகம் மொழி பெயர்ப்பில் இல்லை. இரண்டாவது பாடலில் ''உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த உத்திஷ்ட கருடத்வஜ!'' என்ற அடியில் கோவிந்தனைப் பள்ளியெழுப்பும் மூல ஆசிரியரின் உணர்ச்சி வேகம் மொழி பெயர்ப்பில் இல்லை.

''ஸௌர்யேந்து பௌம'' என்ற பாடலின் தமிழாக்கமாக உள்ள,

'' எந்தநிலை வந்தாலும்
இவையென்ன செய்யும்
எப்போதும் நீயுண்டு
எமைக்காக்க இங்கே''

என்ற பகுதி மூல ஆசிரியர் மனநிலையிலிருந்து மாறுபட்டது ஆகும்.

திருப்பாவை ஐந்தாம் பாடலின் இறுதி அடியில் வரும் ''போய பிழையும் புகுதருவான் நின்றனவும்'' என்ற பகுதி சென்ற (சஞ்சிதம்), வரும் (ஆகாமியம்) ஊழ்வினைப் பயன்களைக் குறிக்கும். அதற்குக் கவிஞர் கூறும் 'அவன் நமது கடந்த காலத் தவறுகளை மன்னிப்பான். எதிர் காலத்தில் நமது அறியாமையையும் மன்னிப்பான்' என்ற பொருள் 'பட்டர்கோன் பாவை ஸ்ரீ ஆண்டாளின் மனக் கிடக்கையைத் தெளிவாக விளக்கவில்லை. ''நமது...தவறுகளை'' என்ற தொடர் 'நம்..தவறுகளை' என்றிருந்தால் நன்றாக இருந்திருக்கும்.

இருபதாம் பாடலின் முதல் அடியின் இறுதியில் 'உயிரை இழந்தோடி' என்பது 'உடலை இழந்தோடி' என்றிருந்தால் அடுத்து வரும் ''உயிராகச் செல்கின்ற'' என்ற தொடருக்குப் பொருத்தமாக இருந்திருக்கும்.

சில சொற்களில் அமைந்து செல்லும் ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதப் பாடல்களை எண்சீர் சந்த விருத்தங்களில் பாட முயன்றதால் அடி அளவைச் சரி செய்யச் சொந்தக் கருத்துக்களையும், கற்பனைகளையும் ஆங்காங்கே சேர்க்கவேண்டியுள்ளது.

இவ்வாறு ஒரு சில குறைகள் இருப்பினும் கவிஞரின் கற்பனைத் திறனும் தமிழ் ஆர்வமும், சொல்லாட்சியும் இந்த நூலில் சிறந்து விளங்கக் காணலாம்.

இருபத்தெட்டாம் பாடலின் முதலடியில், வரும், 'கோபாலம் நீயே' என்ற சொல்லாட்சி மிகச் சிறப்புடையது. தேவகியின் மகனாகிய கோபாலனையும், பிறவிக் கடலைக் கடக்கத் துணையாகும் தலையாய பாலமாகிய கோ பாலத்தையும் 'கோ பாலம்' என்ற தொடர் அழகாகக் குறிக்கிறது. அதே பாடலின் இறுதியில் ''விடிவுக்கு நீ மூலம்'' என்ற கவிஞரின் சொந்தத் தொடர் வழங்கும் கற்பனைக் காட்சி, கருத்துச் செறிவு பாராட்டுதற்கு உரியன. இப்படிப் பற்பல இடங்கள் உள.

'புதிதான தமிழினிலே' 'பாடாண் திணை' முதலிய தொடர்கள் கவிஞரின் தமிழ் ஆர்வத்தையும், புலமையையும் காட்டுவன ஆகும்.

நூலின் மற்றொரு பகுதியான கவிஞரின் திருப்பாவை விளக்கவுரை எல்லோருக்கும் பயன்படும் வகையில் விளங்குகிறது.

மொத்தத்தில் இதனை வாங்கும் தமிழனின் இரண்டு ரூபாய்கள் நிலையான இனிய, இலக்கிய, தெய்வீக நலனைப் பயக்கும் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை.

பொன். சௌரிராஜன்.

கிடைக்குமிடம்:

பொன்னி நூலகம்
11, தீனதயாளு தெரு,
தியாகராய நகர், சென்னை-600017.



# செய்திச் சுருக்கம்

## திருமலையில் வசந்தோற்சவம்

ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் வருடாந்திர 'வசந்தோற்சவ' விழா திருமலையில் 20-4-78 லிருந்து 22-4-78 வரை மூன்று நாட்கள் நடைபெறும். இம் மூன்று நாட்களின்போது, கட்டணம் செலுத்தி நடத்தப்படும் சேவைகளான வசந்தோற்சவம் தவிர, மற்றைய சேவைகளான கல்யாணுற்சவம், சகஸ்ரகலசாபிஷேகம், திருப்பாவாடை, ஊஞ்சல் சேவை, அமந்த்ரோணுற்சவம் மற்றும் வாகன சேவைகளும் நடத்தப்படமாட்டா.

கி. பி. 1360-ஆம் ஆண்டு கல்வெட்டுக்களின்படி, இவ்வசந்தோற்சவ விழா அப்போதே வழக்கில் இருந்ததாகத் தெரிகிறது. விஜயநகர மன்னனின் தளபதிகளில் ஒருவரும், மதுரைச் சுல்தானை எதிர்த்துப்போரிட்டவருமான எர்ரமஞ்சி பெரிய பெம்ம நாயக்கர், திருமலையில் நடைபெற்ற இவ்விழாவில் கலந்து கொண்டதாகத் தெரிகிறது. கி. பி. 1511ஆம் ஆண்டு கல்வெட்டுக்களின் மூலம் இவ் வசந்தோற்சவ விழா ஐந்துநாட்கள் நடைபெற்றதாக உறுதியாக அறியமுடிகின்றது. மேலும் திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயிலில் இவ்விழா மூன்றுநாட்கள் நடைபெற்றதாக அக்கல்வெட்டுக்களின் மூலம் தெரிய வருகின்றது. கி. பி. 1561 - ஆம் ஆண்டு கல்வெட்டுக்களிலும் இவ்விழா குறிப்பிடப் பட்டுள்ளது. திருமலையிலுள்ள புகழ்பெற்ற திருமலைராய மண்டபம், ஊஞ்சல் மண்டபம் ஆகியவற்றினை ஆரவிடு புக்கராஜா ரங்கராஜா திருமலைராயன் கட்டியதாக அக்கல்வெட்டுகள் கூறுகின்றன. கி. பி. 1468 இல் சாளுவ நரசிம்ம மன்னனால் தொடங்கப்பெற்ற வசந்த திருநாள், இத்திருமலைராயன் காலத்தில் மிகவும் ஆடம்பரத்துடன் கொண்டாடப்பட்டு, இறைவன் சிம்ஹ வாகனம், கருடவாகனம், வைகுண்ட வாகனம், யானைவாகனம் முதலிய பல வாகனங்களில் திருவீதிவலம் வருவதும் நடைபெற்றது. ஆனால் தற்போது நடைபெற்று வரும் விழாவில் இறைவன் விழாவின் 2 ஆம் நாளன்று வெள்ளித் தேரில் திருவலம் புரிவார். தி. தி. தேவஸ்தானம் இவ்வெள்ளித் தேரை 1970 இல் ரு. 5 இலட்சச் செலவில் செய்வித்தது. இவ்வாறாக இத்திருமலை உற்சவம் பல்வேறு காரணங்களால் காலத்திற்கேற்றவாறு பல மாற்றங்களைக் கொண்டு விளங்கி வருகின்றது என்பது நன்கு அறிய முடிகின்றது. இறைவனின் விக்ரகங்கள் தவனம் என்ற வாசனைமிக்க மலர்களால் அலங்கரிக்கப்படுவதால், இவ் வசந்தோற்சவ விழா சில சமயங்களில் தமனுரோஹணுற்சவம் என்றும் அழைக்கப்படுகிறது.

மேற் கூறப்பட்ட வசந்தோற்சவ விழா என்பது பிரம்மோற்சவ விழாவின் ஒன்பதாம் நாளன்று நடைபெறும் வசந்தவிழா அல்ல என்பதையும், கட்டணம் செலுத்தி நடத்தப்படும் வசந்தோற்சவ விழாவும் இவ் வசந்தோற்சவ விழாவும் ஒன்றல்ல என்பதனையும் அறிதல் அவசியம்.

## ஸ்ரீ வேதநாராயண சுவாமியின் பிரம்மோற்சவ விழா

ஸ்ரீ வேதநாராயண சுவாமியின் வருடாந்திர பிரம்மோற்சவ விழா நாகலாபுரத்தில், 21-4-78 அன்று நடைபெறும் அங்குரார்ப்பணத்துடன், 22-4-78 முதல் 30-4-78 வரை கோலாகலமாக நடைபெறும். சாதாரணமாக வைணவ கோயில் உற்சவங்களில் சிறப்பாகக் கருதப்படும் கருடோற்சவ விழா 26-4-78 அன்றும், ரதோற்சவ விழா 29-4-78 அன்றும் நடைபெறும். வழக்கம் போல் இவ்விழா நாட்களின்போது, ஸ்ரீ வேதநாராயண சுவாமி தன் துணைப் பெண் தெய்வங்களுடன் காலையிலும், மாலையிலும் பல்வேறு வாகனங்களில் திருவீதி வலம் புரிவார். இவ்விடத்தில் தான் ஸ்ரீமகாவிஷ்ணு சோமகா என்ற அரக்கனைக் கொன்று பிரம்மனுக்கு வேதங்களை மீட்டுக் கொடுத்ததால், இறைவன் வேதநாராயணன் என்றும், இவ்விடம் வேதாரண்யம் என்றும் அழைக்கப்படுகிறது. கிருஷ்ணதேவராயர் காலத்தில், இக் கோயில் சீரும் சிறப்பும் பெற்றிருந்தது. மேலும் இக்கோயில் இந்தியச் சிற்பக்கலையின் பெருமையை விளக்குவதாகவும் அமைந்துள்ளது. ஆகவே யாத்திரிகர்கள் இவ்வரிய வாய்ப்பினைப்பயன்படுத்திக் கொண்டு இறைவனின் அருளைப் பெறுவார்களாக!

## ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாச்சார்யா வருடாந்திர விழா

ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாச்சார்யாவின் 30-வது வருடாந்திர விழா 4-4-78 அன்று திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் நடைபெறும். இவ்விழாவிற்கு ஆந்திர அரசு ஆஸ்தான கவி டாக்டர். சி. நாராயண ரெட்டி அவர்கள் தலைமை வகிப்பார். அன்று காலை 8-30 மணி அளவில், ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மற்றும் ஸ்ரீ அன்னமார்ச்சார்யா திருவுருவப் படங்களுடன்கூடிய திருவீதி வலம் ஒன்று தி. தி. தே. தலைமை அலுவலகக்கட்டடத்திலிருந்து, கலா மந்திரத்திற்கு புறப்படும். காலை 10 மணிக்கு, கலா மந்திரத்தில் திருப்பதி ஸ்ரீவேங்கடேஸ்வரா இசை நாட்டியக் கல்லூரி ஆசிரியர்களாலும், மாணவர்களாலும் ஆராதனையும், கோஷ்டி கானமும் நடைபெறும். மாலை 6 மணி அளவில் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெறும். அன்று இரவு 7-30 மணி அளவில் டாக்டர். எம். பாலமுரளி கிருஷ்ணு அவர்களின் இன்னிசைக் கச்சேரி நடைபெறும். மேலும் 5-4-78 முதல் 9-4-78 வரை, திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா அன்னமாச்சார்யா தியாகராஜா இசை விழா நடைபெறும். இதுபோது தினந்தோறும் மாலை நேரங்களில், திரு. சிட்டிபாபு அவர்களின் வீணைக் கச்சேரியும், கலைமாமணி நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன் அவர்களின் நாதஸ்வர கச்சேரியும் (5-4-78), பேராசிரியர். டி. என். கிருஷ்ணன் மற்றும் குமாரி விஜி கிருஷ்ணன் அவர்களின் வயலின் கச்சேரியும், (6-4-78), சங்கீத கலாநிதி டாக்டர். எம். எல். வசந்த குமாரி அவர்களின் இசைக் கச்சேரியும், (7-4-78), குமாரி ஸ்ரீரங்கம் கோபால ரத்தினம் அவர்

# வேங்கடவன் விண்ணப்ப வெண்பாப் பத்து

வித்துவான் கே. ஏ. மார்க்கபந்து-காஞ்சீபுரம்.

விண்ணப்ப வெண்பா விருப்போ டியானியற்றும்
வண்ணம் பணித்தென்னை வாழ்விக்கத்—திண்ணம்
வருவான் வடவேங் கடத்தண்ணல் வந்தென்
குருவாய் அருள்வான் குறித்து.

ஏழு மலைவாழும் எங்கள் பெருமானைத்
தாழும் மனமுடையோர் தாரணியில்—சூழும்
பிறவித் துயரொழிக்கும் பேறுபெற்றென்றும்
இறவாப் புகழடைவ ரீண்டு.

ஈண்டிய பாவங்க ளென்னைத் தொடராமல்
ஆண்டருளு மெங்களருளாளன்—யாண்டும்
துணையா யிருந்தென் துயர் துடைத்துக் காப்பான்
இணையிலா வேங்கடத்தே யின்று.

கோடிக் கணக்காய் குவிந்துன் மலையகத்தே
நாடி வருமடியார்கள் நாடோறும்—கூடியே
'கோவிந்தா' என்னும் குரல்கேட்கும் வாளாவென்
நாவிருந்த வாறே நகை.

மண்ணகத்து வாழ்வும் வளமாரும் செல்வமும்
எண்ணத்தே நோக்கின் இழிந்தனவே—விண்ணகத்தாய்!
ஒப்பிலா மந்திரமா யோதுமுன்னெட் டெழுத்தைச்
செப்பியே வாழ்வே னினி.

பொன்மகளை மார்பகத்தே போற்றி யணிந்தருளி
என் மனத்துள் நீங்கா தெழுந்தருளும்—தன்மை
மறந்தேன் மணவாளா மண்ணுலகிலுன்னை
அறிந்தே னெனையாண்டு கொள்.

துயர் செய்யும் ஐம்பொறிகள் தூண்டவென் சிந்தை
உயர் நிலையான் செல்லாமல் உந்த—மயல்கொண்டு
வேங்கடவா! வுன்னை வணங்காது யான் செய்யும்
தீங்கடவே செய்வாயினி.

அன்னையா யத்தனுய் எந்த னருந்துணையாய்
மன்னி யெனையாளும் மாமலையாய்!—உன்னை
ஒருநாளும் ஓதா திருந்தறியேன் உந்தன்
திருவடியே சென்றடைந்தேன்யான்.

மாறன் முதலாய மாணடியார் பன்னிருவர்
கூறுந் தமிழ்மாலைக் கொண்டருளி—மாறும்
பிறவிக் கடல்கடக்கும் பேறீந்தாய் என்னும்
உறவை யறியேனோ? வுற்று.

ஆரா வமுதாய், அடியார்க் கருள்செய்யும்
பேரா நிலையுடைய பெற்றியனுய்,—சீரார்
மதியாரும் மாமலைவாழ் வேங்கடவா! வுன்னைக்
கதியாக வந்தடைந்தேன் காண்!

களின் இன்னிசைக் கச்சேரியும் (8-4-78), டாக்டர். ஸ்ரீ நாத பினுக பாணி அவர்களின் இன்னிசைக் கச்சேரியும், திரு. ஈமணி சங்கர சாஸ்திரி அவர்களின் வீணைக் கச்சேரியும் (9-4-78) நடைபெறும்.

## திருவேங்கடவன் பல்கலைக் கழகம்-திருப்பதி தமிழ் மன்றம்

இம்மன்றத்தின் பிப்ரவரித் திங்கள் சிறப்புக் கூட்டம் 23-2-78 வியாழக் கிழமையன்று மாலை 4-30 மணியள வில் தமிழ்த் துறை 248 ஆம் எண் அறையில் சிறப்பாக நடைபெற்றது.

தமிழ்த் துறைத் தலைவர் டாக்டர். கு. தாமோதரனுர் அவர்கள் தலைமை தாங்கினுர்.

மாணவர் தலைவர். என். கிருபானந் தன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த் தினுர். தனது தலைமையுரையில் டாக்டர். கு. தாமோதரனுர் அவர்கள் நாம் சமயக் காழ்ப்பற்று வாழ வேண் டியதன் தேவையை வலியுறுத்தினுர். அன்றைய கூட்டத்தின் சிறப்புப் பேச் சாளரான உயர்திரு. ஞா. மைக்கேல் அவர்கள் ''மணி வாசகரின் இறை யுணர்வு'' என்ற தலைப்பில் வெகு அழகாக உரை நிகழ்த்தினுர். கிருத் துவ சமயத்தைச் சார்ந்த தன்னை திரு வாசகம் எங்ஙனம் கவர்ந்தது என் பதை விளக்கிய அவர், திருவாசகச் சிறப்பியல்புகளையும், தனித்தன்மை களையும் நன்கு விளக்கிக் கூறினுர்.

அவரது சொற்பொழிவை யடுத்து கலந்துரையாடல் நடைபெற்றது. காலங் கடந்தோடுவதையும் கருத்தில் கொள்ளாது அன்பர்கள் வெகு நேரம், மிகவும் சுவையாகக் கலந்துரையாடி யது அன்றைய நிகழ்ச்சிக்கே சிறப்பை யளித்தது.

பின் மாணவர் செயலர் ஒய். வசந்தா அவர்கள் நன்றி நவின்றுர். நாட்டு வாழ்த்துப் பாடலுடன் கூட்டம் இனிதாக முடிவுற்றது.



# ராசி பலன் (1-4-78 முதல் 30-4-78 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி.



## மேஷம் :

*[அசுவனி பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய]*

ராகுவினால் பொருள் வரவு ஆனால் சனியினால் சிற்சில சச்சரவுகளும், தன் பிள்ளைகள் பெண்கள் சம்பந்தப்பட்ட கவலைகளும்; குருவினால் முயற்சிகள் தோல்வி அடைதல்; செவ்வாயினால் கருத்து வேறுபாடுகளும், உடல்நலம் கெடலும், தீய நண்பர்களால் கவலைக் குள்ளாதலும்; சுக்ரனால் நன்மை அடையப் பெறல், புதிய தானிய வகைகள் கிடைக்கப் பெறல், மதிப்புயர்தல், மகிழ்ச்சி; மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது சூரியனால் பிரயாணம், வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல்.



## ரிஷபம் :

*[கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய]*

ராகுவினால் கவலைக்குள்ளாதல்; சனியினால் உற்றார் உறவினருடன் பிரிவு; குரு நன்மை பயப்பதால் வெற்றியும் பணவரவும்; செவ்வாயினால் பணவரவு என்றாலும் உடல்நலம் கெடலும் தீய நட்புறவினால் கவலைக்குள்ளாதலும்; புதனால் பணவரவு, மகிழ்ச்சி, புதிய நண்பர்கள், மக்கட்பேறு, புதிய வாகனம் வாங்குதற்குரிய சூழ்நிலை; சூரியனால் பொருள் வரவும், வெற்றியும்; சுக்ரனால் மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது நன்மை மற்றும் மகிழ்ச்சிக் குரிய வாய்ப்புக்கள்.



## மிதுனம் :

*[மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம 3-ம் பாதம் முடிய].*

ராகுவினால் கருத்து வேறுபாடுகள் ஆனால் சனியினால் பணவரவு, உடல் நல மேன்மை, குடும்பத்தில் மகிழ்ச்சி, புதிய சாமான்கள் அல்லது வாகனங் கள் வாங்குதல்; குருவினால் பணநஷ் டம், அலுவலகக் கவலை, கருத்து வேறு பாடுகள்; புதன் நன்மை விளைவிப்ப தால் பணவரவும், வெற்றியும்; சூரிய னும், சுக்ரனும் நன்மை செய்வதால் குடும்பத்தில் மகிழ்ச்சியும், பணவரவும்.



## கடகம் :

*[புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய]*

ராகுவினால் பணவரவு ஏற்பட்டாலும், சனியினால் அதிக பணநஷ்டம்; குருவினால் பிரயாணமும், உடல் நலம் கெடலும், செவ்வாயினால் கவலைகளுக் குள்ளாதல்; புதனால் ஏமாற்றங்கள்: சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட் களின்போது பண வரவும், மதிப்புயர் தலும்: சுக்ரனால் பணவரவும், புதிய ஆடை ஆபரணங்களும்.



## சிம்மம் :

*[மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய].*

ராகுவினால் அவசியமற்ற செலவினங் கள்; சனியினால் கவலைகளும், உற்றார் உறவினருடன் பிரிவும்; செவ்வாயும் கேடு விளைவிப்பதால் பண நஷ்டம், கவலைகள், மனைவிக்கு மனயமைதியின் மை, ஆனால் புதனால் நன்மை ஏற் படுவதால் வெற்றியும், புதிய ஆடை ஆபரணங்களும், மக்கட்பேறும்; சூரிய னால் உடல் நலம் கெடல், மனைவிக்கு மனயமைதி கெடல்; மாதத்தின் 15 நாட்களின் போது சுக்ரனால் மகிழ்ச்சி. பணவரவு, புதிய ஆடை ஆபரணங் கள் வாங்கப் பெறல், ஆனால் இறுதி 15 நாட்களின் போது கருத்து வேறுபாடு களும் நிகழ்ச்சிக்குள்ளாதல்.



## கன்னி :

*[உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய].*

ராகுவினாலும் சனியினாலும் கவலை களுக்குள்ளாதல்; குருவினாலும் பண நஷ்டம் மற்றும் அலுவலக் கவலை; செவ்வாயினால் நிச்சியமான வெற்றிகள் கிடைக்கப் பெறல், புதனால் கருத்து வேறுபாடுகள்; சூரியன் தீமை செய் வதால் உடல் நலம் கெடல், பிரயா ணம், வயிறு சம்பந்தப்பட்ட நோய்களி னால் துன்பம்; மனைவிக்கு மனயமைதி கெடல், ஆனால் சுக்ரனால் புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப்பெறல், லாபம் மற்றும் மகிழ்ச்சி.



## துலா :

*[சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய]*

ராகுவினால் அவசியமற்ற செலவினங் கள், ஆனால் சனியினால் மகிழ்ச்சியும் முயற்சிகள் வெற்றி பெறலும்; குருவி னால் பணவரவு, மக்கட்பேறு தன் மக் களுக்கு நன்மை அல்லது புதிய தானிய வகைகள் கிடைக்கப் பெறல்; செவ்வாயினால் பணவரவு; புதனால் வெற்றி; சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நல மேன்மையும், வெற்றியும், ஆனால் இறுதி 15 நாட்களின் போது பிரயா ணமும், வயிறு சம்பந்தப்பட்ட நோய்

களினுல் அவதியுறல்; சுக்ரனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது, பெண்களால் பிரச்சனைகள், மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது பணவரவு, வெற்றி, மகிழ்ச்சி.



விருச்சிகம் :

[விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய]

ராகுவினுல் நன்மை; சனியினுல் பண நஷ்டம், கல்வி தடைபடுதல் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல்; குருவினுல் கவலைகள், உடல் நலம் கெடுதல்; செவ்வாயினுல் பணநஷ்டம், அவமானப்பட நேரிடுதல்; புதனுல் மனைவி, மக்களுடன் கருத்து வேறுபாடுகள்; மாதத்தின் முதல் 15 நாட்களின் போது சூரியனுல் எதிரிகள் ஏற்படல், உடல் நலம் கெடல், இறுதி 15 நாட்களின் போது பணவரவு, வெற்றி; சுக்ரனுல் உடல்நலம் கெடல், இகழ்ச்சிக்குள்ளாதல், பெண்களால் இடர்ப்பாடுகளுக்குள்ளாதல்.



தனுசு :

[மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய].

ராகுவினுல் சச்சரவுக்குள்ளாதல்; சனியும் ராகுவிற்கு உடன்பாடாய் இருப்பதால், அதனுல் உடல் நலம் கெடலும், தீயநடவடிக்கைகளுக்குள்ளாதலும்: ஆனுல் குருவினுல் நன்மையும் மகிழ்ச்சியும்; செவ்வாயினுல் பண நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல், புதனுல் எல்லாவிதத்திலும் குடும்பத்தில் மகிழ்ச்சி, சூரியனுல் எதிரிகள் ஏற்படல், உடல் நலம் கெடல், மாதத்தின் முதல் 15 நாட்களின் போது சுக்ரனுல் நல்ல நட்புறவுகள், லாபம், புதிய விருந்தினர் வருகை ஆனுல் இறுதி 15 நாட்களின்போது உடல் நலம் கெடல், அவமானப்படுதல்.



மகரம் :

[உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய].

ராகுவினுல் தீய காரியங்களை மேற்கொளல்; சனியினுல் உற்றூர் உறவினருடன் பிரிவு; குருவினுல் கவலைகள்; செவ்வாயினுல் தன் மனைவி மக்களுடன் கருத்து வேறுபாடுகள், புதனுல் புதிய நண்பர்கள், அலுவலகக் கவலைகள்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பணவரவு, வெற்றி, இறுதி 15 நாட்களின்போது உடல் நலம் குன்றுதல்; சுக்ரனுல் பண வரவு, புதிய நண்பர்கள், புதிய சுற்றத்தார், மக்கட்பேறு அல்லது தன் மக்களுக்கு நன்மை.



கும்பம் :

[அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய]

ராகுவினுல் கவலைகள்; சனியினுல் பிரயாணம்; குருவினுல் பணவரவு, புதிய வீட்டுச் சாமான்கள் வாங்கப் பெறல், மக்கட்பேறு அல்லது அவர்களுக்கு நன்மை; செவ்வாயினுல் பண வரவு, அவமானப்படல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது கண் சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதிப்படல், நஷ்டம், ஏமாற்றப்படல், இறுதி 15 நாட்களின் போது வெற்றி, பணவரவு; சுக்ரனுல் ஆடைஆபரணங்கள் கிடைக்கப்பெறல், வீடு அல்லது வீட்டுமனை கிடைக்கப் பெறல் அல்லது நல்ல குடியிருப்பு, லாபம், நல்ல நட்புறவுகள்.



மீனம் :

[பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய].

ராகுவினுல் சச்சரவுகள்; சனியினுல் உடல் நல மேன்மை, நன்மை; குருவினுல் உறவினர்களால் துன்பங்கள்; செவ்வாயினுல் உடல் நலம் கெடல், தன் மக்களால் கவலைக்குள்ளாதல்; புதனுல் கருத்து வேறுபாடுகள், நஷ்டம்; சூரியனுல் பிரயாணம், பணநஷ்டம், ஏமாற்றங்கள், கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதியுறல்; சுக்ரனுல் தன் மதிப்புயர்தல், லாபம், புதிய நண்பர்கள், குடும்பத்தில் மகிழ்ச்சி, மக்கட்பேறு அல்லது அவர்களுக்கு நன்மை:

## ஸ்ரீ பத்மாவதி தாயார் ஆர்ஜித அபிஷேகம்

ரூ. 100/- செலுத்தி யாத்திரிகர்கள், திருச்சானூரிலுள்ள ஸ்ரீ பத்மாவதி தாயாருக்கு, வெவ்ளிக்கிழமைதோறும் நடத்தப்படும், சர்க்கார் ஆர்ஜித அபிஷேகத்தைச் செய்விக்கலாம் இதுபோது தொகை செலுத்தும் கிருஹஸ்தரைச் சார்ந்த இரு நபர்கள், அபிஷேக பால் கலசத்தைத் தாங்கிச் செல்லவும், மற்றும் திருக்கோயிலினை ஊர்வலமாக வந்த பிறகு அபிஷேகத்தைக் காணவும் அநுமதிக்கப்படுவர். வார திட்டத்தில் குறிப்பிட்டுள்ள மளிகைச் சாமான்களைத் தவிர, கிருஹஸ்தர் செலுத்தியத் தொகையில் மேற்கொண்டு வேறு எந்தவிதமான மளிகைச் சாமான்களும் வாங்கப்படமாட்டாது. மேலும் கிருஹஸ்தருக்கு எந்தவிதமான பிரஸாதமும் வழங்கப்படமாட்டாது.

செயலாட்சித் தலைவர்.
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI, 517501



அண்மையில் திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் இரு டாவது கூடைப்பந்தாட்டப் போட் நடைபெற்றது.



ஸ்ரீவேங்கடேஸ்வரா பல்கலைக்கழகக்கல்லூரி மு வர் திரு. இ. ஆர். ஸ்ரீ கிருஷ்ணசர்மா அவர் இப்போட்டி ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட ஆரம்பவிழாவில் பங்கேற்று, போட்டியினைத் துவக்கி வைத்து உரையாற்றுகின்றார்.



போட்டியில் வெற்றி பெற்ற, ஹைதராபாத் பேஸ்கட்பால் அஸோஸியேஷன் 'ஏ' அணித் தலைவர், தேவஸ்தான சுழற்கோப்பையினை ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகக் கல் லூரியின் வரலாற்றுத் துறைத் தலைவ ரும், விழாவின் சிறப்பு விருந்தினரு மான டாக்டர் வி. எம். ரெட்டி அவர்களிடமிருந்து பெறுகின்றார்.

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

### சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய் கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 முதல் | 3-30 | வரை | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப சர்வதரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவைகள் |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | , | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 1-00 மதியம் | | ஸர்வ தரிசனம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தப) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவு மணி |
| 9-00 | ,, | 11-00 | ,, | சுத்தி முதலிவைகள் |
| 11-00 | ,, | 11-30 | ,, | ஏகந்த சேவை (ஆர்ஜிதம்) |

### புதன் கிழமைகளில் (சஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 10-00 | ,, | சஹஸ்ர கலசாபிஷேகத்திற்கு ஏற்பாடுகள் |
| 10-00 | ,, | 1-00 மதியம் | | சஹஸ்ர கலசாபிஷேகம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 2-00 | ,, | 8-00 இரவு | | ஸர்வ தரிசனம |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவு மணி முதலியவைகள் |
| 9-00 | ,, | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 | ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவைகள் |
| | | 11-30 | | ஏகாந்தசேவை (ஆர்ஜிதம்) |

### வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 6-00 | ,, | விஸ்வரூப தரிசனம் |
| 6-00 | ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 11-00 | ,, | சாலிம்பு, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடா அலங்காரம், மணி, திருப்பாவாடா கிரஹஸ்தர்களுக்கு பஹுமானம் முதலியவை |
| 11-00 | ,, | 7-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 7-00 | ,, | 7-30 இரவு | | சுத்தி முதலியவை |
| 7-30 | ,, | 9-00 | ,, | பூலங்கி சமர்ப்பணம் இரவு கைங்கர்யம், இரவு மணி |
| 9-00 | ,, | 11-30 | ,, | பூலங்கி (ஆர்ஜிதம்) |
| 11-30 | ,, | 11-45 | ,, | சுத்தி முதலியவை |
| | | 11-45 | | ஏகாந்தசேவை (ஆர்ஜிதம்) |

### வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 5-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 5-00 | ,, | 7-00 | ,, | சாலிம்பும், நித்ய கட்டளையும், கைங்கர்யங்களும் (ஏகாந்தம்) |
| 7-00 | ,, | 9-00 | ,, | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 9-00 | ,, | 11-00 | ,, | அபிஷேகானந்தார தரிசனம் (ஆர்ஜிதம்) |
| 11-00 | ,, | 12-30 மதியம் | | சமர்ப்பணம் |
| 12-30 | ,, | 2-00 மாலை | | தோமால சேவை அர்ச்சனை (தனி) மணி, பலி, சாத்துமுறை |
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யங்கள் இரவு மணி |
| 9-00 | ,, | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 | ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவை |
| | | 11-30 | | ஏகாந்தசேவை (ஆர்ஜிதம்) |

குறிப்பு: விழா நாட்களின்போதும், சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும் மேற்கூறிய நிகழ்ச்சி நிரல்கள் தேவையின் பொருட்டு மாற்றப்படும்.